வெள்ளை

# டெட்

# சலவையின் மேன்மை வெண்மை யுடன் தூய்மை

வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் துணிகளை துப்புரவாகவும், பளிச்சிடும் வெண்மையுடனும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பழுதாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

வெள்ளை உடைகளோ, வண்ண நிற ஆடைகளோ, பருத்தி, நைலான், கைத்தறி, ரேயான் எல்லாவித துணிகளையும், பழுதாகாமல், சுலபமாக, பளிச்சென்று வெண்மையாக சலவை செய்யும் சாதனம் நவீன வெள்ளை டெட் தான்.

அரை வாளித் தண்ணீருக்கு இரண்டு அல்லது மூன்று டேபிள் ஸ்பூன் அளவே போதும்.




ஸ்வஸ்திக்

ஆயில் மில்ஸ் லிமிடெட் பம்பாய்-1



# கல்கி
## பொருளடக்கம்

குரோதி பங்குனி 1 ● ● ● ● ● மார்ச் 14






● "கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


தனியார் தொழிலின் சமாதானத்திட்டம்!
காங்கிரஸ்


1967


புலியின் ஷொட்டு!


சரணாகதி!
போடு கையெழுத்து
இந்தி ஹிட்லர்கள்




PK



மலர் 24 ● இதழ் 33

# காகிதக் கணக்கு

வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டியாகிவிட்டது; பெயரளவுக்கு உபரியாகக் கொஞ்சம் கையிருப்புக்குக் கூட வகை செய்யப்பட்டிருக்கிறது என்ற ரீதியில் நிதி அமைச்சர் திரு டி. டி. கே. இவ்வாண்டு பட்ஜெட்டைச் சமர்ப்பித்திருக்கிறார். இங்குமங்குமாகச் சில சலுகைகளும் காட்டியிருக்கிறார். சில இனங்களில் புது வரிசுமையும் விதித்திருக்கிறார்; சில இனங்களில் சிறிதளவு வரி வஜாவும் செய்திருக்கிறார். ஆனால் சர்க்காரைப் பொறுத்தமட்டில் மொத்த வருமானத்தில் எவ்வித குறைவும் ஏற்படவில்லை. அதாவது மக்கள் மேல் போட்டிருக்கும் பாரம் குறையவில்லை. இப்படிக் கஜானாவுக்கும் வருவாய் குறையாமல், மக்களுக்கும் விசேஷ நலன் கிடைக்காமல், பரவலாகச் சலுகைகள் காட்டப்பட்டிருக்கின்றன என்ற எண்ணத்தை மேலெழுந்தவாரியாக உண்டுபண்ணியுள்ள பட்ஜெட்டைக் கண்டு அமைச்சருடைய சாமர்த்தியத்தை வியக்கலாம். மக்கள் உண்மையில் சந்தோஷப்பட முடியாது.

இப்போதுள்ள விலைவாசிகள் குறைவதற்கு ஏதாவது வகை செய்யப்பட்டிருக்கிறதா? தொழில் பெருகுவதற்கு வகை வகுக்கப்பட்டிருக்கிறதா? உற்பத்தி பெருக வழிகள் செய்யப்பட்டிருக்கின்றனவா? வரி முறைகளின் கடுமை குறைக்கப்பட்டிருக்கிறதா? இப்போதுள்ள சமூகப் பொருளாதார நிலைமையில் இதைத்தான் பட்ஜெட்டில் மக்கள் சாதாரணமாக எதிர்பார்க்கிறார்கள். மேலாகப் பார்க்கும்போது இதற்கெல்லாம் சிறிதளவேனும் வகை செய்யப்பட்டிருப்பதாகவே தோன்றும். ஓரளவுக்குச் செய்யப்பட்டிருக்கின்றன; ஆனால் கூர்ந்து கவனித்தால் பயனளிக்கும்படி உருப்படியாக ஒன்றும் செய்யப்படவில்லை என்றே தெரியும். வரப்போகும் நான்காவது திட்டத்தின் பலனாக விலைவாசிகள் இப்போதைவிட இன்னும் மேலாக ஏறும். அதற்கு எந்தவிதமான மருந்தும் காணவில்லை.

தொழில் விஸ்தரிப்புக்கும் உற்பத்திப் பெருக்கத்துக்கும் தடையாக இருப்பது மூலதனமின்மை. மூலதன மார்க்கெட் சேமிப்பில்லாததாலும், வரிச் சுமையினாலும் இப்போது ஸ்தம்பித்துவிட்டது. இந்நிலையை மாற்ற வேண்டும் என்று தொழில் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டுள்ளவர்கள் கோரினார்கள். முக்கியமாகக் கம்பெனிகள் பங்குதாரர்களுக்கு வினியோகிக்கும் டிவிடெண்டு மீது வசூலிக்கப்படும் வரியை வஜா செய்வதால் தொழிலில் முதலீடு செய்பவர்களுக்கு உத்சாகம் பிறக்கும் என்று எடுத்துச் சொன்னார்கள். ஆனால் இது செய்யப்படவில்லை; செய்யப் போவதில்லை என்றும் சொல்லிவிட்டார். ''போனஸ்'' தொகைகள் மீது விதிக்கப்படும் வரியும் நியாயமற்றது. தொழில்களில் முதலீடு செய்யப்படுவதை இது தடை செய்கிறது என்று எடுத்துச் சொல்லப்பட்டது. இதை ஓரளவுக்கு ஒப்புக் கொண்டாலும் முற்றிலும் இதை எடுத்துவிட அமைச்சர் முன்வரவில்லை.



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி —
பாப்பா
— பாரதியார்

தொழில் கம்பெனிகள் செலுத்தும் வரி விகிதம் உலகத்திலேயே இந்தியாவில்தான் மிக அதிகம் என்றும் இதன் கடுமை குறைய வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. இதன் உண்மையை ஒப்புக்கொண்டாலும் இதை ரூபாய்க்கு 74 பைசாவிலிருந்து 70 பைசாவுக்குக் குறைத்து இந்த 4 பைசா சலுகையைக் கொண்டே தொழிலை அபிவிருத்தி செய்யச் சொல்லியிருக்கிறார்

திரு டி. டி. கே. அவரது இந்தச் சலுகையைக் கண்டு தொழிலுலகம் திருப்தியடையாததில் வியப்பில்லை.

வருமான வரி செலுத்துவோரின் வரிச் சுமையும் உலகத்திலேயே இந்தியாவில்தான் மிக உயர்ந்தது. கடுமையானது என்ற அபவாதத்தை இந்தியா சம்பாதித்திருக்கிறது. இந்தப் பட்ஜெட்டில் ஒரு மிகச் சிறிதளவு குறைத்த பிறகும் உலகத்திலேயே அதிக வரி செலுத்தும் நாடு என்ற அந்தஸ்தை இன்னும் நாம் இழக்கவில்லை.

தொழில்களுக்கு மிக அவசியமானவை என்று கருதப்பட்டு இறக்குமதியாகும் இனங்கள் மீது பட்ஜெட்டுக்கு முன்னரே உபரி சுங்க வரி அறிவிக்கப்பட்டது. இதனால் தொழில் உற்பத்திகளின் அடக்கவிலை கூடுதலாகி அதன் மூலம் விலைவாசிகளும் உயர ஏதுவாகிறது. இதிலிருந்து கிடைக்கும் வருமானத்தையும் சேர்த்துத்தான் வரவு செலவு சரிக்கட்டப்பட்டது. ஆகவே இது ஒரு ''குட்டி பட்ஜெட்'' என்றே கருதலாம். புதுத் தொழில்களை ஆரம்பிக்கத் திட்டமிட்டவர்களுக்கும், பழைய தொழில்விஸ்தரிப்புக்கு வழிவகை ஏற்பாடு செய்திருப்பவர்களுக்கும் இது ஓர் அடி.

விலைவாசிகள் இப்போதுள்ள உயர் நிலையில் இருப்பதற்கு, உற்பத்தி பெருகாதது ஒருபுறமிருக்க, இரண்டு இதர காரணங்கள் உண்டு. ஏகத்தாறான எக்ஸைஸ் வரிகள் ஒன்று: ஏற்கனவே நிதிப் பற்றாக்குறையை இட்டு நிரப்ப அச்சடித்து வழங்கப்பட்டுள்ள நோட்டுகள். இவ்விரண்டு இனங்களிலும் புது ஆண்டிலும் கடுமை குறையும் என்று நினைக்க இடமில்லை. ஏனெனில், சில இனங்களில் — சைக்கிள் டயர், காலணிகள், மோட்டார ரக ஜவுளி இழைகள் போன்றவைகளில் — குறைக்கப்பட்ட வரிகளால் ஏற்படும் இருபத்தொன்பதரை கோடி வருமான நஷ்டத்தைத் தாம்பிரத் தகடு, கம்பிகள், எவர்சில்வர் தகடுகள், எஃகுப் பொருள்கள் போன்ற இனங்களில் அதிகரிக்கப்பட்டுள்ள வரிகளிலிருந்து கிடைக்கும் ரூ. 31 கோடி வசூலிலிருந்து ஈடு செய்திருக்கிறார் அமைச்சர். ஏன், கூடுதலாக ஒன்றரைக் கோடி கிடைக்கவே வகை செய்து விட்டார்.

தவிரவும், வருமானத்தைக் குறைத்து மதிப்பீடு செய்து, பற்றாக்குறை பட்ஜெட் தயாரிப்பதும், இதைக் காரணமாகக் காட்டி புது வரிகள் விதிப்பதும் நிதி அமைச்சர்கள் கையாளும் முறை என்பது யாவரும் அறிந்ததே. 1962–63ம் ஆண்டில் மட்டும் மதிப்பீட்டைக் காட்டிலும் 119 கோடி ரூபாய் எக்ஸைஸ் வரிகள் மூலம் அதிகமாக வசூலாயிற்று. நடப்பு ஆண்டில் (1964–65) 105 கோடி அதிகமாக எதிர்பார்க்கப்படுகிறது. இந்த ரீதியில் பார்த்தால் அடுத்த ஆண்டில் இந்தத் தொகை கணிசமாகவே இருக்கும். ஆகவே வரிச் சுமையின் கடுமை குறையாமலிருக்கும் போது விலைவாசிகள் எப்படிக் குறையும்?

பணப் புழக்கத்தின் விஷயமும் இதே ரீதியில்தான் இருக்கிறது. சென்ற ஐந்தாண்டுகளில் பணப் புழக்கம் ஒன்றரை மடங்கு பெருகியுள்ளது. பண்டங்களின் உற்பத்திப்பெருக்கு 100லிருந்து 116 ஆகத்தான் இருக்கிறது. அதாவது தேவைக்கு அதிகமாக 30 சதம் பணப் புழக்கம் ஏற்பட்டிருக்கிறது. விலைவாசிகளும் ஏறக்குறைய இதே அளவில்தான் உயர்ந்திருக்கின்றன. விலைவாசி உயர்வுக்கும் பணப் புழக்கத்துக்கும் நேரடி சம்பந்தம் எவ்வளவு இணக்கமாக இருக்கிறது என்பது இதிலிருந்து தெரியும். வரும் ஆண்டில் வரவு - செலவு சரிக்கட்டப்பட்டு விட்டதால் புதிதாக நோட்டு அச்சடித்து வழங்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக்காதாகையால் இந்த நிலைமை மோசமடையாது என்று எதிர்பார்க்கிறார்கள். மோசமடையா விட்டால் நல்லதுதான். சர்க்கார் ஆண்டுதோறும் கடன் எழுப்புவதுபோல இந்த ஆண்டிலும் 270 கோடி கடன் எழுப்பப் போகிறார்கள். போதிய அளவு கடன்தொகை கிடைக்கா விட்டால் ரிசர்வ் பாங்கிதான் அதற்கு ஈடாக நோட்டு அச்சடித்துக் கொடுத்துவிடும். இப்படி நிகழ்ந்தால் என்ன, பற்றாக்குறை என்று அப்பட்டமாக அரசாங்கம் சொன்னால் என்ன, இரண்டும் ஒன்றே.

ஆகவே விலைவாசிகளைப் பொறுத்தமட்டில் அவை குறையுமென்று எதிர்பார்க்க பட்ஜெட்டில் ஆதாரம் ஒன்றும் இல்லை. விலைகளை உயர்த்தி வைத்திருப்பது கறுப்புப் பணம்தான் என்ற கருத்திலே இதை வெளிக் கொணர சாம, தான, பேத, தண்ட உபாயங்களெல்லாம் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இவை பலனளிப்பதாகவே இருந்தாலும்கூட விலைவாசிகள் இறங்குமா என்பது சந்தேகமே.

கடந்த பதினைந்து ஆண்டுகளில் படிப் படியாக உயர்ந்து கொண்டே வந்துள்ள வாழ்க்கைச் செலவு உயர்வில், மாதச் சம்பளக்காரர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சலுகை கடுகளவுக்குத்தான் சமானம். அராபிய நாடுகளில் சொல்வது போல, ஒட்டகத்தின் முதுகில் ஏற்றி வைத்துள்ள கணக்கற்ற மூட்டைகளில் ஒரு சிறிய மூட்டையைத் தூக்கியெறிந்து விட்டு, ஒட்டகத்தின் பளுவைக் குறைத்து விட்டதாக ஒரு பிரமையை உண்டுபண்ணுவது போல அமைச்சர் டி.டி.கே.யும் நம் நாட்டு மக்கள் மனத்தில் உண்டாக்கியிருக்கிறார். காகிதத்தில் கணக்கு அழகாய்த்தான் இருக்கிறது. இது மட்டும் போதுமா?

ஐந்தாண்டுகளுக்கு முன் மொத்த வருவாய் 919 கோடியாக இருந்தது. இப்போது 2353 கோடிக்குப் பெருகியுள்ளது. அமோகமான வருவாய் கிடைத்துள்ள இந்த ஆண்டில் மக்களுக்கு உண்மையிலேயே நல்லதைச் செய்ய ஒரு வாய்ப்பு. இந்த வாய்ப்பை அமைச்சர் தவற விட்டு விட்டார்.

1967ம் ஆண்டு தேர்தல் எதிர்நோக்கியிருக்கிறது என்பதைக் கவனத்தில் வைத்துக் கொண்டு, மூன்றாவது திட்டத்துக்கு இந்தப் பட்ஜெட்தான் கடைசிப் பட்ஜெட் என்பதையும் கருத்தில் வைத்து, ''மூன்றாவது திட்டத்தையும் வெற்றிகரமாக நிறைவேற்றி விட்டோம்'' என்று தேர்தல் பிரசாரத்துக்குப் பல்லவி அமைக்க வேண்டும் என்ற நோக்கத்திலேயே அமைச்சர் டி. டி. கே. இவ்வாண்டு பட்ஜெட்டை உருவாக்கியுள்ளார் என்று எண்ணத் தோன்றுகிறது.

[ நிதி அமைச்சர் திரு டி. டி. கே.யின் இவ்வாண்டு பட்ஜெட் அறிக்கையைப் பொதுமக்கள் எப்படி வரவேற்கின்றனர் என்பதைப் பல பிரிவினர்களைப் பேட்டி கண்டு சேகரித்த அபிப்பிராயங்கள் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.]

# டி. டி. கே.யின் பட்ஜெட் எப்படி?

**மாதச் சம்பளம் வாங்குபவர்:** வருமான வரி விகிதம் சிறிதளவு குறைக்கப்பட்டிருக்கிறதை எண்ணி சந்தோஷப்படுவதற்கில்லை. ஆண்டுக்கு 5000 ரூபாய் கிடைப்பவர்களுக்கு இப்போது அளிக்கப்பட்ட சலுகை நூற்றுக்கு ஒரு ரூபாய்க்கும் குறைவே. விலைவாசிகள் சென்ற ஆண்டுகளில் உயர்ந்துள்ளதையும், ரூபாயின் மதிப்பு பதினேழு பைசா தான் என்பதையும் நினைத்துப் பார்த்தால் இந்தச் சலுகை கடலில்கரைத்த பெருங்காயம் மாதிரிதான். இதைக் கொண்டு எங்கள் குழந்தைகளுக்கு நாலு பெப்பர்மெண்டு வாங்கிக் கொடுக்கக்கூட முடியாது.

**கல்யாணமாகாதவர்கள்:** எங்களைக் கண்டால் எல்லோருக்கும் இகழ்ச்சி. நாங்கள் தான்தோன்றிகளாகத் திரிந்து கொண்டிருப்பவர்கள் என்று ஒரு தவறான எண்ணம்! 1000 ரூபாய் வரையிலும்தான் எங்களுக்கு வரி கொடாமலிருக்கச் சலுகை. இதை இரண்டாயிரத்துக்கு இப்போது உயர்த்தியிருக்கிறார்கள். எங்களுக்கு நகரங்களில்தான் பிழைப்பு. எங்களை நம்பி வாழ்பவர்கள், அப்பா, அம்மா, தங்கை, தம்பிகள் என்றெல்லாம் ஒரு குடும்பமே உண்டு. கல்யாணமானவர்கள், கல்யாணமாகாதவர்கள் என்ற பாகுபாடே வருமான வரி சம்பந்தப்பட்ட வரையில் நியாயமாகத் தோன்றவில்லை.

**கம்பெனிப் பங்குதாரர்கள்:** ரயில் பிரயாணிகளில் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் எப்படியோ அப்படித்தான் தொழில் உலகத்தில் பங்குதாரர்கள். தொழில் செழிப்பது எங்களால்தான். ஆனால் கவனிக்காமல் விடப்படுவதும் நாங்கள்தான். நாங்கள் போட்ட முதலுக்கு 'டிவிடெண்ட்'' எதிர்பார்ப்பதே மிகத் தவறு என்றுகூட அரசாங்கம் நினைப்பதாகவே தோன்றுகிறது. விநியோகிக்கப்படும் டிவிடெண்டு மீது அரசாங்கம் வசூலித்து வரும் ஏழரைச் சதவிகித வரி நீக்கி விடப்படும், எங்களுக்கு டிவிடெண்டு கொஞ்சம் கூடுதலாகக் கிடைக்கும் என்று எதிர்பார்த்தோம். ஆனால் அமைச்சர் டி.டி.கே. கையை விரித்து விட்டார். புதுக் கம்பெனிகளில் பணம் போட்டால், டிவிடெண்டுக்காகக் காத்திருக்க வேண்டிய இடைக்காலத்துக்குப் பெயரளவுக்கு வரி–வஜா அளிக்கப்பட்டிருக்கிறது. இதைக் கண்டு நாங்கள் பூரித்துப் போகவில்லை. நிம்மதியாகவே பாங்கியில் போட்டு வட்டி வாங்கிக் கொள்ளலாமே. தொழிலில் போட்டு ஆண்டுதோறும் பட்ஜெட்டில் என்னென்ன புதுப்புது வரிகள் வருமோ என்று பயந்து கொண்டே இருக்க வேண்டாமே.

**உயர் வருமானக்காரர்கள்** (ரூ. 15000க்கு மேல் வருமானம் உள்ளவர்கள்) அரசாங்கத்துக்கு எந்த வரி வேண்டுமானாலும் எந்த அளவுக்கு வேண்டுமானாலும் எங்கள்மீது விதிக்கலாம், யாரும் பரிந்து பேச மாட்டார்கள் என்ற நிச்சயம். எங்களுக்கு வரிவிகிதமும் அதிகம். இப்போது கொஞ்சம் குறைத்திருக்கிறார்கள். ஆனால் வரிக் குறைவை ஈடு செய்து அதிக சுமையை ஏற்றி வைப்பது சர்க்காரிடம் கட்டாயமாகச் செலுத்தவேண்டிய 'அன்யூவிடி' சேமிப்புத் தொகை. எங்களுக்குத் திருப்பிக் கொடுத்துவிடுவார்கள் என்பது வாஸ்தவம்தான். ஆனால் திருப்பித் தரப்படும்போது ரூபாயின் மதிப்பு எப்படியிருக்கும் என்று எண்ணவே பயமாயிருக்கிறது. மேலும், திரும்பப் பெறும்போது அதன் மீது அந்த ஆண்டில் அமலில் உள்ள வரி விகிதப்படி வரி வசூலித்து விடுகிறார்கள். இந்த நிர்ப்பந்த சேமிப்பை அரசாங்கத்திடம் செய்யாமல், நாங்களே இஷ்டம் போல் செய்துகொள்ள விட்டால் என்ன? புதுப் புது தொழில்

---

# வழக்கு ரத்து; நமது வேண்டுகோளும் ரத்து

இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் கைதான மாணவர்களின் சார்பில் நீதிமன்றங்களில் வழக்காடுவதற்காக ஒரு நிதி தொடங்குவதென உத்தேசிக்கப்பட்டிருந்தது. திருவாளர்கள் எஸ். கிருஷ்ணமூர்த்தி (முன்னாள் சென்னை மேயர்), பேராசிரியர் எம். ரத்தினசாமி, ஆர். எம். சேஷாத்திரி, தமிழக மாணவர் சங்கத் தலைவர் ரவிச்சந்திரன் ஆகியோர் நிர்வகிப்பதற்கிருந்த மேற்படி நிதிக்கு உதவி செய்ய விரும்புகிறவர்கள் மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு பொருளனுப்புமாறு கோரி இவ்விதழில் இதே இடத்தில் ஒரு வேண்டுகோள் வெளியிட்டிருந்தோம். ஆனால் இவ்விதழில் சில ஆயிரம் பிரதிகள் அச்சானவுடனேயே மேற்படி வேண்டுகோளுக்கு அவசியம் ஏற்படாமற் செய்யும் நற்செய்தி கிடைத்துள்ளது. மாணவர்கள் மீது தொடரப்பட்ட வழக்குகள் அனைத்தையும் சர்க்கார் வாபஸ் பெற்று விட்டனர் என்பதையும் சிறைத் தண்டனையடைந்த இரு மதுரை மாணவர்கள் விடுதலை செய்யப்பட்டு விட்டனர் என்பதையும் அறிந்து பெருமகிழ்ச்சியடைகிறோம். எனவே, இந்தி எதிர்ப்பு மாணவர் வழக்கு நிதியையும் ரத்து செய்கிறோம்.

களில் முதலீடு செய்ய அதிக வாய்ப்பாவது இருக்குமே. ஆண்டுக்கு 15,000, 20,000 வருமானக்காரர்கள் விஷயத்திலாவது இந்த 'அன்யூடிடி' முறையை ரத்து செய்யலாம்.

**தொழிலதிபர்கள்:** தொழிலை வளர்ப்பது எங்கள் வேலை. தொழில் அபிவிருத்திக்கு மேலும் வகை செய்யவே நாங்கள் காத்திருக்கிறோம். மூன்றாவது நான்காவது திட்டங்களில் இம்மாதிரி தொழில்களை, மேலும் வளர்க்க வேண்டும் என்றுதான் எங்களிடம் எதிர்பார்க்கப்படுகிறது. இதைச் செய்ய மூலதனம் திரட்டப் போதிய சூழ்நிலையை உண்டாக்கக் கோரினோம். வரி முறைகளின் கடுமையைத் தளர்த்தும்படி கேட்டோம். ஆனால் எதிர்பார்த்த சலுகைகள் இவ்வாண்டு பட்ஜெட்டில் கிடைக்கவில்லை. இறக்குமதிப் பொருள்களுக்குப் பத்து சதவிகிதம் சமீபத்தில்தான் உபரி சுங்கவரி விதிக்கப்பட்டது. தொழிற்சாலை உற்பத்திகளின் விலை இதனால் கூடவே செய்யும்.

**நகரத்துக் குடும்பத் தலைவி:** நிஜவெள்ளியின் விலை மூன்று ரூபாயாக உயர்ந்துவிட்டதே என்று பார்ப்பதற்காகவாவது வெள்ளியாக இருக்கட்டுமே என்று எவர்சில்வர் பாத்திரங்களை அதிகமாக உபயோகப்படுத்திக் கல்யாணம் கார்த்திகைகளைக்கூட எப்படியோ சமாளிக்கிறோம். புது வரி விதிக்க எவர்சில்வர் தகடுகள்தானா அகப்பட்டன? புடைவை விலையாவது குறையுமோ, அதற்கும் வழி இல்லை. பஞ்சுக்கு வேறு வரி போட்டிருக்கிறார்கள். இஞ்சி லாபம் மஞ்சளில் என்பது போல் எங்கள் பாடு திண்டாட்டம்தான்.

**பொருளாதார நிபுணர்கள்:** வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டி விட்டார்கள். எனவே நோட்டடித்துப் பற்றாக்குறையை நிரப்ப வேண்டிய அவசியம் இருக்காது; புது வரிகள் விதிக்கப்படவில்லை என்று பாராட்டலாம். வரி முறைகள் புரியாதபடி சிக்கலாக இருந்தவைகளை ஓரளவுக்குச் சுலபமாக்கப் பட்டிருப்பதற்கும் சந்தோஷம் கொள்ளலாம். ஆனால் இதெல்லாம் ஏட்டுக் கணக்கு. உற்பத்தியின் அளவு குறைந்தாலும் வருமானம் பெருகிக் கொண்டே போவதிலிருந்து இதை எவ்வளவு குறைவாக முன் ஆண்டுகளில் மதிப்பீடு செய்திருக்கிறார்கள் என்பது விளங்கும். இதெல்லாம் பட்ஜெட் தயாரிப்பில் கையாளப்படும் தந்திரங்கள்.

# கேரளமக்கள் சிரித்திருப்பார்கள்!

பார்லிமென்டில் மெஜாரிட்டிக் கட்சித் தலைவராயிருப்பதன் மூலம் தேசத்தின் பிரதமராக ஆட்சிப் பொறுப்பில் உள்ள ஸ்ரீ லால் பகதூர் அவர்கள் கட்சிப் பிரசாரம் செய்யத் தயங்க வேண்டும். அவர் அதை மறந்து கேரளத் தேர்தல் தினத்துக்கு முதல் நாள் ஒரு விளம்பரம் விடுத்திருக்கிறார். 'ஸ்திர நிருவாகம் வேண்டுமானால் காங்கிரஸுக்கே வாக்களிக்க வேண்டும்' என்பது அவருடைய வாதம். கேரளத்தில் காங்கிரஸ் அமைப்பிலேயே ஸ்திரத் தன்மையின்றி இரண்டு கட்சிகளாகப் பிரிந்து போட்டியிட்டபோது பிரதமர் இவ்வாறு கூறியிருக்கிறார்!

காங்கிரஸ் நிர்வாகத்தில் உள்ள ஏராளமான ஊழல்களையெல்லாம் 'ஸ்திரத்தன்மை' என்ற ஒரு வாதத்தினால் ஈடுசெய்துவிட முடியுமா? காங்கிரஸ் ஊழல்களுக்கு ஒரு பெரிய திருஷ்டாந்தம் பிரதமரின் விளம்பரம் வெளியான அன்று அதே செய்தித்தாள்களில் கொட்டை எழுத்துக்களில் வந்திருக்கிறது. ஒரிஸ்ஸா காங்கிரஸ் விவகாரங்களைப் பற்றிய விசாரணையில் வெளியான ஊழல்களும், பிரதமரின் விளம்பரமும் ஒரே பக்கத்தில் பிரசுரமாயிருப்பதைக் கண்டு கேரள மக்கள் சிரித்திருப்பார்கள். 'பெர்மிட், லைசென்ஸ் ஆட்சியின் ஸ்திரமான அநுபந்தமாக பட்நாயகரையும், பிரேன் மித்ராவையும் இணைத்து நாம் நிருவாகத்தை ஸ்திரப்படுத்திக் கொள்ள வேண்டுமா?' என்று மக்கள் சிரித்திருப்பார்கள். ஒரிஸ்ஸா விசாரணை அசாதாரணமான விஷயமல்ல. கடந்த ஓராண்டாக இது போல் பல நிருவாக ஊழல்கள் வெளியானபடி இருக்கின்றன. இந்தச் சமயத்தில் சாதுரியமுள்ள பிரதமர் கட்சிப் பிரசாரத்தை திரு காமராஜ் அவர்களுக்கே விட்டிருக்க வேண்டும்.



## வருந்துகிறோம்

திருநெல்வேலி பிரபல வழக்கறிஞரும் சுதந்திரக் கட்சியின் மாவட்டக் கிளைத் தலைவரும் பிரதான ஆதரவாளருமான திரு எஸ். ராமஸ்வாமிக் கோனார் காலமானார் என்ற செய்தி கேட்டு மிக வருந்துகிறோம். நாட்டு நலனையும் மக்கள் நலனையும் ஒருங்கே உயர்வாக மதித்துச் சுயநலமற்றுப் பணிபுரிவதில் உண்மையான ஆர்வத்துடன் வாழ்ந்தவர் ஸ்ரீ ராமஸ்வாமிக் கோனார். நேர்மையும் நல்ல குணமும் படைத்தவர். அன்னாரின் மறைவுச் செய்தியைக் கேட்டதும் வருத்தம் தோய்ந்த மனத்துடன் ராஜாஜி, "நான் அறிந்த நண்பர்களுள் மிகவும் பெருந்தன்மையும், அறிவும், பக்தியும், நெறியும் கொண்டவரை இழந்துவிட்டேன்" என்று தமது அநுதாபத்தைத் தெரிவித்தார். அன்னாரது குடும்பத்தாருக்கு நமது அநுதாபங்கள்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

ஒரிஸ்ஸாவில் நடந்த ஊழல்களின் முறையின்மை ஒருபுறமிருக்க, ஊழல் விசாரணை அறிக்கையின் அம்சங்களை எதிர்க் கட்சி அங்கத்தினர் ஒருவர் அறிந்து வெளிப்படுத்தும் வரையில் அதைக் காங்கிரஸ் சர்க்கார் ஒளித்து வைக்கப் பார்த்தது காங்கிரஸ் கட்சிக்கு மகத்தான அவமானம்.

ஒரிஸ்ஸாவில் ஊழல்களுக்குக் காரணமாயிருந்தவர்களை இந்தியக் குற்றச் சட்டத்தின் (Indian Penal Code) பத்தொன்பதாம் பிரிவின்படி தண்டிப்பதற்கு விசாரணையில் வைக்கச் சர்க்கார் இனியும் தயங்கக் கூடாது.

* * *

ஒரு பெரிய ரயில் விபத்துக்காக முன்பு ஸ்ரீ லால்பஹாதூர் அவர்கள் ரயில் மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்தார். கெய்ரோன், பட்நாயக், மித்ரா போல் பல ஆட்சித் தலைவர்கள் தடம் புரண்டதற்குக் காங்கிரஸ் கட்சி முழுவதுமே ராஜிநாமாச் செய்ய வேண்டும்.

ஆனால் லால் பஹாதூர் ராஜிநாமாச் செய்த காலம் இப்போது மாறிவிட்டது. பெர்மிட் - லைசென்ஸ் - கோட்டா முறை மக்கள் வாழ்க்கை முழுவதும் ஆழ வேரோடி விட்டதால் 'ஸ்திர'மாகிவிட்ட காங்கிரஸின் ஸ்திரத் தன்மையைக் காப்பாற்றி அதிகாரத்தை விடாப்பிடியாக வைத்துக்கொண்டிருக்க முழுமூச்சுடன் முயலுகிறார்கள்.

* * *

1928-ம் ஆண்டில் தட்சிண பாரத ஹிந்தி பிரசார சபையின் ஹிந்தி ஸ்வபோதினிக்கு நான் எழுதிய முகவுரையை மேற்கோள் காட்டி என் முரண்பாட்டை வட இந்தியர்கள் வன்மையாகக் கண்டிக்கிறார்கள்.

ஐம்பது வருஷங்களாக இருந்து வரும் ஒரு பிரச்னையில் ஒரே கருத்தைப் பின்பற்றுவதில் அர்த்தமுமில்லை; அறிவுமில்லை. பல ஆண்டு அநுபவத்தின் மேல்தான் என்னுடைய இன்றைய கருத்து உருவாகியுள்ளது.

என் கருத்து தலைகீழாக மாறிவிட்டது என்று நான் நினைக்கவில்லை. அன்றிலிருந்து இன்றுவரை என் அபிப்பிராயங்களுக்கு ஊடே ஒரு தொடர்புச் சங்கிலி இழையோடுகிறது என்றே நினைக்கிறேன். 1928ல் சுயராஜ்யம் என்பது எட்டாக் கையிலிருந்தது. எனினும் அப்போதே வட இந்தியர்கள் ஹிந்தி குறித்து எவ்வளவு தீவிரமாயிருப்பார்கள் என்பதை ஊகித்தேன். சுதந்திர ஆட்சி ஏற்பட்டு ஹிந்தி முக்கிய மொழியானதும் ஹிந்தி பேசாதவர்கள் பின்தங்கிவிடக் கூடாது என்றே ஹிந்திப் பிரசாரத்துக்காகப் பாடுபட்டேன். 1937ல் நான் பிரதம மந்திரியானபோது ஹிந்தியைப் பள்ளிப் பாடத் திட்டத்தில் சேர்த்தேன். ஆனால் அதற்குத் தீவிர எதிர்ப்பு விடாப்பிடியாக இருந்ததால் திட்டம் சரியாக நிறைவேறவில்லை.

ஹிந்தி பாஷைக்குத் தமிழ் நாடு தயாராகவில்லை. எனவே இப்போது நம்மீது ஹிந்தியைச் சுமத்துவதை நான் ஆட்சேபிக்கிறேன். நான் கொள்கையை மாற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்பதைவிட சமநீதியைப் பெரிதாகக் கருதிப் பேசுகிறேன். இதுவே முரண்பாடாகத் தோன்றுகிறது.

நான் ஹிந்திப் பிரசாரத்தை ஆரம்பித்த போது மத்திய சர்க்காரின் அலுவல்கள் மிகவும் குறைவு. இன்று போல் அது சர்வ வியாபகமாக இல்லை. அப்போது கிரேக்க மொழியிலோ, லத்தீனிலோ மத்திய சர்க்காரை நடத்தியிருக்கவும்கூட முடியும். முப்பதாண்டுகளுக்கு முன் காரிய சாதகமாக இருந்த திட்டத்தை இன்று ஏற்க முடியாது.

ஐம்பதாண்டுகளாயினும் ஒருவர் ஒரே கொள்கையைப் பின்பற்ற வேண்டுமெனில் மூடப் பிடிவாதம்தான் நிற்கும். ஒருபுறம் ஏராளமான மக்கள் சுதேசாபிமானம் என்று எண்ணிச் செய்யும் திட்டத்தை மறுபுறம் ஏராளமான மக்கள் சமநீதிக்கு விரோதமானது என ஆட்சேபிக்கும்போது இவ்விஷயத்தில் ஒருவர் ஒரே கருத்தில் ஒட்டிக் கொண்டிருக்க முடியாது. நான் ஒவ்வோர் அடியையும் யோசனையுடன் எடுத்து வைத்து சத்தியத்தில் உறுதியான நம்பிக்கையுடனேயே இவ்விஷயத்தில் என் கருத்தை உருவாக்கி வந்திருக்கிறேன். இது அரசியல் சந்தர்ப்பவாதமில்லை, உண்மையான அபிப்பிராய பரிணாமம் என்று மக்கள் புரிந்துகொள்ளக் கோருகிறேன்.

ஒரு நண்பர் எழுதிய கடிதத்தில் காந்திஜி ஒரு பெரியவரிடம் முப்பது ஆண்டுகளுக்கு முன் சொன்னதாக எழுதப்பட்ட ஒரு விஷயம்: ராஜாஜி ஹிந்தியைப் பரப்புவதற்கும் படிப்பதற்கும் எல்லாவித உதவியும் செய்வார். ஆனால் ஆட்சி மொழியாக ஹிந்தியைத் திணிக்க அவர் ஒப்பவே மாட்டார் என்று சொன்னதாக எழுதப்பட்டிருக்கிறது. இது எனக்குத் தெரியாது. ஆனால் என் உள்ளத்தின் ரகசியத்தை மகாத்மாஜி நன்கு அறிந்தவர்.

# ORWO ஆர்வோ கலர்

**ஆர்வோ கலர்** ஃபிலிமில் இயற்கை வர்ணங்களை, உள்ளது உள்ளபடி படம் எடுக்கலாம். அது பிளாக் அண்டு ஒயிட்டைப் போலவே சுலப மானது. **ஆர்வோ கலர்** ஃபிலிம் ஐரோப்பாவிலேயே மிகப்பெரிய ஃபிலிம் தொழிற்சாலையும், கலர் ஃபிலிம் தயாரிப்பில் முதன்மையானதுமான வெப் ஃபிலிம் ஃபேப்ரிக் உல்பெனின் உயர்தர தயாரிப்பாகும்.

**ப்ரோஸஸிங் இந்தியாவிலேயே செய்யப்படுகிறது.**
**விபரங்களுக்கு ஆர்வோ வியாபாரியைக் கேளுங்கள்.**




**VEB FILMFABRIK WOLFEN**
German Democratic Republic
ஆர்வோ ஃபிலிம் ஈஸ்டர்ன் யூனிட்,
சென்னை - 2 .... கல்கத்தா - 13

SG5/4/65



## வட்டமேஜை

இந்த உருக்கமான கடிதத்தைப்
படிக்கும் எவருக்கும் கண்ணீர்
துளிக்கத்தான் செய்யும்

# ஓர் உருக்கமான கடிதம்

வடசேரி மீனவர் கூட்டுறவு சங்கம் வயதில் சிறியது. அது தோன்றி இரண்டு ஆண்டுகள்தான் ஆகின்றன. ஆனால் இந்தச் சிறிய வயதில் அது அடைந்துள்ள வளர்ச்சி மிகப் பெரியது. முதலாண்டு முடிவிலேயே நூறு ஏழைக் குழந்தைகளுக்குப் புத்தகம், சிலேட்டு ஆகியன கொடுத்து உதவியது. பல நல்ல காரியங்கள் செயல்பட அன்பளிப்பும் வழங்கியது.

இந்தச் சங்கத்தின் எல்லை வடசேரி—நாகர் கோவில்—வடிவீசுவரம் ஆகிய பகுதிகளாகும். 1964ம் வருடம் சங்க எல்லைக்கு உட்பட்ட பகுதிகளில் உள்ள குளங்களில் மீன் பிடிக்கும் உரிமையைத் தாலுகா அலுவலகம் குத்தகை மூலம் அளித்தது. 1965ம் வருடத்துக்கும் முந்திய வருடத்தைப் போல் சங்க எல்லைக்கு உட்பட்ட குளங்களை அளிக்க வேண்டுமென்று கேட்டு 26–11–64ல் விண்ணப்பம் அனுப்பியது. தாலுகா அலுவலகத்திலிருந்து, 'அகஸ்தீஸ்வரம் தாலுகா முழுவதிலும் உள்ள குளங்களை அளிக்கிறோம். எடுத்துக் கொள்கிறீர்களா?'' என்று கேட்கப்பட்டது. இப்படி அவ்வலுவலகம் கேட்டதற்குக் காரணம் முன்பு அக்குளங்களை எடுத்த ஒரு கூட்டுறவு சங்கம் பணத்தைச் சரியாகக் கட்டாததேயாகும்.

நாங்கள் எல்லாக் குளங்களையும் எடுத்துக் கொள்வதற்கான பணம் எங்கள் சங்கத்துக்கு இல்லையாதலால் தேரூர், மருங்கூர், சுசீந்திரம், புறக்கை, தெங்கம்புதூர் ஆகிய ஐந்து பகுதிகளில் உள்ள குளங்களை வேண்டுமானால் எடுத்துக் கொள்ளுகிறோம் என்று 7–1–65ல் எழுத்து மூலம் தெரிவித்தோம். இதன்படி 11–1–65ல் பி.13; 670-65 என்ற நம்பரில் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

பின்பு, 15–1–65ல் கன்னியாகுமரி மாவட்ட மீன்துறை உதவி நெறியாளரின் சொந்தக்காரரும் — காங்கிரஸ் பிரமுகருமான திரு டி. என். ராமசாமிப்பிள்ளை அவர்கள் தேரூரில் புதியதொரு மீனவர் கூட்டுறவு சங்கம் ஆரம்பித்துள்ளதாகவும், அதற்குத் தேரூர் முதலிய பகுதிகளில் உள்ள குளங்கள் தரப்பட வேண்டும் என்று தமது காங்கிரஸ் செல்வாக்கை உபயோகித்து அதிகாரிகளிடம் கேட்டார். இந்தச் செய்தி மாவட்ட மீனவர்களிடையே பெரும் பரபரப்பை உண்டாக்கியது. தேரூர், சுசீந்திரம் ஆகிய ஊர்களில் உள்ள மீன் பிடித் தொழில் நடத்தி வரும் மீனவர்கள், புதிய மீனவர் கூட்டுறவு சங்கம் தோன்றியுள்ளது தமக்குத் தெரியாது என்றும், அதில் அங்கத்தினர்கள் யார் இருக்கிறார்கள், யார் யார் சம்பந்தப்பட்டு இது ஆரம்பிக்கப்பட்டது என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டும் என்றும் மந்திரி, கலெக்டர் — இதர அதிகாரிகள் ஆகியோருக்கு 18–1–65ல் புகார் மனு கொடுத்தனர்.

ஏழை மீனவர்களின் புகார் மனு என்ன ஆனதோ? அதோடு 11–1–65ல் அளிக்கப்பட்ட பி.13; 670-65 என்ற நம்பர் உத்தரவு 15–1–65ல் காங்கிரஸ் பிரமுகர் கேட்டதற்கிணங்க, பழைய உத்தரவு ரத்து செய்யப்படாமலே அதே நம்பரில் 25–1–65ல் புதிய உத்தரவு வெளி வந்துள்ளது. இது காங்கிரஸ் பிரமுகருக்குச் சாதகமான உத்தரவு. அந்தக் காங்கிரஸ்காரர், உறவினரான மீன் துறை உதவி நெறியாளரின் உதவியோடு உண்மையிலேயே ஒரு மீனவர் கூட்டுறவு சங்கம் உருவாக்கியிருந்தாலும்கூட, 15–1–65ல் விண்ணப்பித்த ஒருவருக்காக 11–1–65ல் கொடுக்கப்பட்ட உத்தரவு மாற்றப்படலாமா? இது முறையாகுமா? இது நீதியாகுமா ?

இப்படிக் காங்கிரஸ்காரருக்காகப் பெரிய அதிகாரிகளின் உத்தரவு மாறுகிறதென்றால், இனி இந்த நாட்டில் ஏழைகள் யாரை நம்பி வாழ்வது ? ஏழைகளை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்.

நாகர்கோவில்
30–1–65 டி. கே. அந்தோனி
தலைவர், வடசேரி மீனவர் கூட்டுறவு சங்கம்.

சீ காரா பாலைவனத்தில் ஒட்டகத்தின் மீது பிரயாணம் செய்கையில் இருந்திருந்தாற் போல் இட்டிலி சாப்பிட வேண்டும் போலிருந்தது ஓர் அப்பாவி மனிதருக்கு. மனைவியிடம் மனத்தில் எழுந்த அசட்டு ஆசையை அவர் வெளியிட்டதுதான் தாமதம், "அதற்கென்ன? அரை நிமிஷம் பொறுத்திருங்கள். அருமையான இட்டிலி தயாரித்துத் தருகிறேன்" என்று பதில் வந்தது. ஆட்டுக்கல், அரிசி எதுவுமில்லாமல் எப்படி இட்டிலி தயாரிக்க முடியும் என்று வியந்து கொண்டிருந்தார் நம் கதாநாயகர். கைவசம் தயாராக வைத்திருந்த பதார்த்தங்களைச் சரியான சதவிகிதத்தில் கலந்து கடகடத் 'இமர் இட்டிலி' தயாரித்த அந்த அம்மணியை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும்!

'இமர் இட்டிலி' தயாரிப்பதற்காக அனுஷ்டிக்கப்படும் முறையைத்தான் 'இமர் வீடுகள்' கட்டுவதற்கும் கையாளுகிறார்கள். ஒரு கட்டிடத்தின் பல்வேறு பாகங்களான கூரை, ஜன்னல்கள் சுவர், கதவுகள், மாடிப் படி, தூண்கள் முதலியவற்றை முன் கூட்டியே தயாரித்து அவசியமேற்படும்போது சரிவரப் பொருத்தி வீடு கட்டும் முறைக்குத்தான் 'இமர் வீடு' கட்டும் முறை என்று பெயர். மேல் நாடுகளில் இன்று கட்டப்படும் வீடுகளில் பல இமர் வீடுகள் தான். பிரான்ஸில் வருடத்துக்கு நாற்பதாயிரம் 'இமர் வீடுகள்' கட்டுகிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். மற்ற ஐரோப்பிய நாடுகளிலும் ஏன், அமெரிக்காவிலும் கூடத் 'இமர் வீடு'கள் சர்வ சகஜமாகி விட்டன. பழமை மோகத்தில் மூழ்கித் திளைத்திருக்கும் பிரிட்டனும் கொஞ்ச காலமாகத் 'இமர் வீடுகள்' கட்டும் முறையில் தன் கவனத்தைச் செலுத்தி வருகிறது. ரஷ்யாவில் முழு மாளிகையையே ஓரொரு சமயம் தொழிற்சாலைகளில் தயாரித்து வேண்டுமிடத்துக்கு எடுத்துச் செல்கிறார்கள் என்று கேள்விப்படுகையில் 'அலாவுதீனும் அற்புத விளக்கும்' என்ற கதையில் வரும் மந்திரவாதி ஏன் வியந்து வாயைப் பிளக்க மாட்டான்?

'இமர் வீடுகள்' திடீரென்று எப்படிப் பிராபல்யமடைந்தன என்பதைப் பார்ப்போம்.

இரண்டாவது மகாயுத்தம் ஐரோப்பாவை ஒரு மயான பூமியாக மாற்றியதல்லவா? போதாததற்குப் பிரான்ஸ் போன்ற நாடுகளில் ஜனத்தொகை அபரிமிதமாக அதிகரித்தது. மக்கள் வருமானம் குறைந்தது. வீடுகளின் எண்ணிக்கை போதவில்லை. இந்த விபரீத நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்று வியந்தபடி கட்டிடக் கலைஞர்கள் 'இமர் வீடு'கள் கட்டும் முறையில் தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்தினார்கள். நாளடைவில் ஐரோப்பா முழுதும் இந்த முறைகள் நடைமுறையில் வரத் தொடங்கின. ஆராய்ச்சி மனப்பான்மை படைத்த





# திடீர் வீடுகள்

ஜி. எஸ். பாலகிருஷ்ணன்

❊ முன் பக்கத்தில்: திடீர் வீடுகளுக்கான சுவர்கள் தயார்

❊ 'லிப்ட் ஸ்லாப்' முறையில் கூரையும் தூணும் மேலே செல்லுகின்றன.

❊ கீழே: முன்கூட்டியே தயார் செய்த சுவர் மேலே எடுத்துச் செல்லப்படுகிறது.

பொறி இயல் நிபுணர்கள் பழைய முறைகளில் மாறுதல்கள் ஏற்படுத்தினதுடன், புத்தம் புது முறைகளையும் கண்டுபிடிக்கத் தொடங்கினார்கள். பயனுள்ள வீடுகள் அழகுள்ள வீடுகளாகவும் மாறின என்று குறிப்பிட வேண்டிய அவசியமே இல்லையல்லவா?

'திடீர் வீடுகள்' கட்டுவதற்காக உதவும் எத்தனையோ முறைகளில் 'லிப்ட் ஸ்லாப்' (Lift slab) முறையும் ஒன்று. சாதாரணமாகப் பல மாடிக் கட்டிடம் ஒன்றைக் கட்டுவதாக இருந்தால் படிப்படியாகத்தானே கட்டி முடிக்க வேண்டும்? முதலில் ஒரு மாடியின் கூரையைக் கட்டி கான்க்ரீட் போட்ட பின் அது காயும் வரையில் காத்திருக்க வேண்டும். பிறகு இரண்டாவது மாடி—இப்படி. ஆனால், 'லிப்ட் ஸ்லாப்' முறையைக் கையாண்டால் குறைந்த காலத்தில் கட்டிடம் முழுவதையும் உருவாக்கிவிடலாம். இந்த முறையைக் கையாள்கிறவர்கள் தரையிலேயே அடுத்தடுத்து மாடிகளுக்கான அத்தனை கூரைகளையும் தயாரித்துவிடுகிறார்கள். அத்துடன் அவற்றுக்குப் பொருத்தமான தூண்களையும், தாங்கிகளையும் கூடச் சமைத்துவிடுகிறார்கள். பிறகு 'ஹைட்ராலிக் ஜாக்'குகளின் உதவியினால் மேலே எடுத்துச் சென்று கட்டிடத்தை உருவாக்குகிறார்கள்.

நம் நாட்டைப் பொறுத்த வரையில் வீட்டுப் பிரச்னை மகத்தான பிரச்னை. வட இந்தியாவில் வருடந்தோறும் வீடில்லாத காரணத்தினால் குளிரில் நடுங்கிச் சாகும் ஏழைகளின் எண்ணிக்கை மிக அதிகம்.

புது வீடுகள் கட்டுவதாக இருந்தால்கூட டில்லி, கல்கத்தா போன்ற பெரிய பட்டணங்களில் இடத்துக்கு என்ன செய்வது? ஆகாயத்தைத்தான் நாம் இனி பார்க்க வேண்டும். அதாவது பல மாடிக் கட்டிடங்கள் கட்டி வானத்தை நோக்கி வளர்ந்தால்தான் வீட்டுப் பிரச்னைக்கு வழி காண முடியும். இதுபோன்ற நெருக்கடியான சந்தர்ப்பத்தில் துரிதமாக உருவாகும் 'திடீர் வீடு'களைப் பற்றி நாம் எண்ணாமல் இருக்க முடியுமா என்ன?

'திடீர் வீடு'களைத் திடீரென்று நடைமுறையில் கொண்டு வருவதில் சில சிரமங்கள் இருக்கத்தான் செய்கின்றன. மேல் நாடுகளில் வீட்டின் அத்தனை பாகங்களையும் ஒரு தொழிற்



சாலையில் தயாரித்து, பிறகு அவற்றை வீடு கட்டும் ஸ்தலத்துக்கு எடுத்துச் செல்கிறார்கள். ஆனால் நமது நாட்டில் இது சாத்தியமில்லை. ஏற்கனவே நிறைந்து வழியும் ரஸ்தாக்கள் வழியாக வீட்டின் பல்வேறு பாகங்களை ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு எடுத்துச் செல்வது என்பது இலேசான காரியமா என்ன? தவிர நம் நாட்டிலிருக்கும் பாலங்களிலும் இவ்வளவு பாரத்தைத் தாங்க முடியாது. இந்தக் கஷ்டங்களை வெல்லுவது எங்ஙனம்?

வீட்டிற்கான அத்தனை பாகங்களையும் கட்டிடம் உருவாகும் இடத்திலேயே தயாரித்தால் 'இமர் வீடு'கள் கட்டுவது எளிது. 'லிப்ட் ஸ்லாப்' முறை போன்ற நவீன முறைகளைக் கையாண்டால், கண் மூடித் திறப்பதற்குள் பல மாடிக் கட்டிடம் ஒன்றை எழுப்பி விடலாம்.

'வீட்டைக் கட்டிப்பார்' என்ற பழமொழி வீடு கட்டுவதிலுள்ள சிரமத்தைக் காட்டுகிறது. 'இமர் வீட்டைக் கட்டிப் பார்!' என்ற புது மொழியோ, வீடு கட்டுவது எவ்வளவு சுலபமான வேலை என்ற கருத்தை எதிரொலிக்கிறது!

இமர் வீடுகள் கட்டும் முறை நம் பாரதத்தில் நடைமுறைக்கு வருமானால் நம் நாட்டின் வீட்டுப் பஞ்சம் தீரும் என்பதோடு மட்டுமல்ல, நடுத்தர - குறைந்த வருவாயுள்ளவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதமாகவும் அமையலாம். சொந்தமாக வீடு கட்டிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துக்கே இடம் கொடுக்கத் துணிவில்லாத அளவுக்கு வீடு கட்டுவதற்கான செலவுகள் விசுவரூபமெடுத்துள்ள இக்காலத்தில் இமர் வீடுகளை உருவாக்கும் முறை வருமானால் செலவுகள் பெருமளவு குறையும்.



## காருட வாதி

**எல். ஸி. ரிச்சர்டு**

உதர பாஷிதம் என்பது தனிக்கலை. வயிற்றினால் பேசுவது என்பர். பேசினும் தொனி வேறெங்கோ இருந்து உற்பத்தியாவது போல் இருக்கும். நடிப்புத் துறையில் ஒருவரே பல பாத்திரங்களைப் போல் தனக்குத் தானே பேசி ஓரங்க நாடகமே நடத்திவிடுகிறார்கள் சில கலைஞர்கள். இதில் முன்னணியிலிருந்து பெயர் பெற்றவர் டாக்டர் சந்திரசேகரர். இவர் ஆந்திர நாட்டவர்.

நாடக ரீதியிலே மக்களுக்கு அறிவூட்டி வளர்க்க முடியும் என்பதில் பூரண நம்பிக்கையுள்ளவர். தம் சொந்தச் செலவிலேயே தெலுங்கு நாட்டிலும், தமிழ் நாட்டிலும் பல பட்டணங்களுக்குச் சென்று தம் திறமையைப் பிரசித்தப் படுத்தியிருக்கிறார். அது மாத்திரமல்ல; கிராமங்களுக்கும் லாரியிலோ அல்லது மாட்டு வண்டிகளிலோ தம் உதவியாளருடன் சென்று கொள்கைக்காகப் பாடுபடுபவர். லாரியின் பின்புறம் திரை வைத்துக் கட்டி நாடக மேடையாக்கும் விதத்தைப் படத்தில் காணலாம். ஒரு மேடையோ திண்ணையோ கிட்டாவிட்டால் தரை மட்டத்திலும் நாடக மேடையை உண்டாக்கிக் கொண்டு தமது திறமையைக் காட்டத் தொடங்கி விடுகிறார் இவர். இதற்கெல்லாம் கிராமத்தாரின் உதவி பெருவாரியாகக் கிடைக்கும் என்பதில் தமக்குச் சந்தேகமேயில்லை என்கிறார் டாக்டர் சந்திரசேகர்.

கடைசிமுறையாக நான் அவரைப் பார்த்த பொழுது அவர் நமது நாட்டுப் பிரதமர் ஜவாஹர்லால் நேருவைப்போல் 'மேக் — அப்' செய்து கொண்டு முதல் சுதந்திரச் சொற்பொழிவை ஒப்புவித்தார். கண்ணைத் திறந்து கொண்டு பார்க்கும்பொழுது சாட்சாத் பிரதமரே நின்று பேசுவது போல் காணப்பட்டது. இதற்கு இரண்டு விஷயங்கள் ஆதாரமாயிருந்தன. ஒன்று, 'மேக் — அப்', வேஷம் போடுவது ஒரு கலை என்றும், அதில் நிபுணர்கள் உலகத்திலுள்ள எவரையுமே ''டூப்'' செய்துவிடலாம் என்றும் கூறுவார். அதற்கு அத்தாட்சியாக ஹிட்லரைப் போலவே இவர் தம்மை மேக்-அப் செய்து கொண்டுள்ள போது பார்த்தேன். ஷேக்ஸ்பியரின் வெனிஸ் நகரத்தின் வணிகன், ஷைலாக்கைப் போல் 'மேக்-அப்' செய்திருப்பது மிகப் பிரமாதம்.

இரண்டாவதாக இவருக்குப் பலிப்பது இவர் தொனி. மிகவும் சாமர்த்தியமாக வேறொருவர் பேச்சை எங்கேயோ இருந்து பேசுவது போல் கேட்கும்படி செய்துவிடுவார். இதுவும் பழக்கத்தில் கொண்டு வந்துவிடலாம் என்கிறார். பள்ளி மாணவர்களுக்கும் கல்லூரிகளில் இவருடைய கலை நிகழ்ச்சிகள் மிகவும் பிடித்தமாயிருந்துவருகின்றன. கிராமங்களில் இவர் சேவையை நீடித்துப் பயன்படுத்தி யிருக்கலாம். ஆனால் நாடோடிக் கலைஞர்களைப் போல் உள்ள இவர் ஒரு கட்டுப்பாட்டுக்கு அடங்கிப் பணி செய்வாரா என்பது சந்தேகமே.



# ஒப்பற்றவை!
# தரத்திலும் சரி, விலையிலும் சரி



"மான்ஸனைஸ்டு" நேஷனல்–எக்கோ ரேடியோக்களின் அமைப்பு, மேன்மையான உறுப்புகள், உழைப்பின் தரம் இவற்றோடு இதர ரேடியோக்களின் அம்சங்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள். நேஷனல்–எக்கோ தான் உங்கள் பணத்துக்கு ஏற்ற மதிப்பு தருகிறது என்பதை நீங்களே ஒப்புக்கொள்வீர்கள். நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் உஷ்ணப் பிரதேச கால நிலைகளால் பாதிக்கப்படாதபடி அதன் உறுப்புகள் பாதுகாக்கப்பட்டுள்ளன; அதனால்தான் இவை நீடித்து உழைக்கின்றன. உங்கள் அருகில் உள்ள நேஷனல்–எக்கோ வியாபாரியிடம் இன்றே சென்று இவற்றை இலவசமாக இயக்கிக் காட்டச் சொல்லுங்கள்!

மாடல் 806:
6 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள்,
அழகிய பெட்டி.
மாடல் U-806 ஏஸி/டிஸி ஸெட்.
மாடல் A-806 ஏஸி ஸெட்.
ரூ. 395.00

விலைகள் எக்ஸைஸ் ட்யூடி உள்பட, வரிகள் தனி

**நேஷனல் எக்கோ**

மான்ஸனைஸ்டு
ரேடியோ

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்
பம்பாய் . கல்கத்தா . பாட்னா . மதராஸ் . பெங்களூர் . டில்லி . ஸெகந்திராபாத்

JWT GRA 3128

## செய்திப் படங்கள் :

1. சென்னையில் அமெரிக்கப் பல்கலைக் கழக மாணவர்கள் 'கார்ட்டன்டைம்—யு. எஸ். ஏ.' என்னும் நிகழ்ச்சியை மியூசிக் அகாடமி மன்றத்தில் மார்ச் 2, 3-தேதிகளில் விமரிசையாக நடத்தி அனைவரது உள்ளத்தையும் கவர்ந்தனர்.

2. இவை புராதனமான சிற்பங்கள் அல்ல, அயனாவரம் டாக்கர் சத்திரத்தில் உள்ள காசி விசுவநாதர் ஆலயத்தில் பிரதிஷ்டையான புத்தம் புது பிரதோஷ மூர்த்தியர்தான். இவற்றைப் படைத்துத் தந்தவர் ஸ்ரீ எஸ். எம். கௌரி சங்கர ஸ்தபதி.

சென்னை ரேடியோ நாடக விழாவில் இடம் பெற்ற 3. 'சித்திரக் கோட்டம்', 4. 'பிறைச் சந்திரன்', 5. 'வாழ்வெனும் வேள்வி', 6. 'காதல் சக்கரம்', ஆகிய நாடகங்களில் பங்கு கொண்ட டி. கே. எஸ். சகோதரர்கள், எஸ். வி. சஹஸ்ரநாமம், சாவித்திரி — கணேசன் தம்பதியர், நாகேஷ் முதலியோரைப் படத்தில் காணலாம்.



1



2

3



4



5



6







## முதல் டெஸ்ட்

**இடது பக்கம்:** துரானி 'அவுட்!'. போர்டே, நட்கர்னி அபார ஆட்டங்கள்!

**இந்தப் பக்கத்தில்:** இன்ஜினியர் 'ரன்களைக் குவிக்கிறார்! கவர்னருக்கு நியூஸிலந்து கோஷ்டி அறிமுகம். 'பூவா? தலையா?' பரிசோதனையில்... பட்டோடியின் வெற்றியைப் பாராட்டுகிறார் ரீட். முதல் டெஸ்டில் முதன்மையான பௌலர் வேங்கடராகவன்.











# மலேஷியா?



கோலாலம்பூர் சர்வகலாசாலையில் லிம் என்ற சீன மாணவன் படித்து வந்தான். அவனுடைய பாட்டனார் காண்டன் நகரிலிருந்து பசியால் வாடும் கூலியாக மலேயாவுக்கு வந்தார். உழைப்பு அவரை உயர்த்தி விட்டது. குடும்பம் செல்வத்தில் வளர்ந்தது. ''என்னைச் சீனன் என்று குறிப்பிடாதீர்கள். மலேயன் என்று அழையுங்கள். நான் இப்போது இந்த நாட்டுக்குச் சொந்தமாகிவிட்டேன். இந்தியர்களோ, சீனர்களோ, இலங்கையர்களோ, அராபியர்களோ எல்லோரும் இங்கு மலேயர்கள்தான்'' என்று அந்த லிம் தன் அமெரிக்க நண்பர் மாரிஸ் என்பவரிடம் பெருமிதத்துடன் குறிப்பிட்டானாம்.

# லோகசஞ்சாரம்

★ தென் போர்னியோ கிராமப் பகுதியில் சிறுவர்கள் கல்வி பயில்கிறார்கள்

★ வருடத்தில் 30,000,000 பவுன் மதிப்புடைய மரங்களை ஏற்றுமதி செய்கிறது வடக்கு போர்னியோ



★ மலேயா நாட்டின் உழவுத் திருநாள் நடனம்

★ போர்னியோவின் ஆதிவாசியான இபான் இனத்தைச் சேர்ந்தவர் சிகரெட்டை ருசிக்கிறார்.

★ பினங்குத் தீவில் ஒரு பரபரப்பு மிகுந்த கடைத் தெரு



படங்கள்:

நேஷனல் ஜியோகிரபிக்



இந்தப் பெருமிதம் மலேயாவாழ் தமிழர்களிடமும் காணப்பட்டாலும் அது இன்னும் அழுத்தமாகத் தோன்ற வேண்டும் என்று திரு ம. பொ. சிவஞானம் குறிப்பிட்டார்.

சமீப காலத்தில் மலேயாப் பகுதிகளுக்குப் போய்த் திரும்பிய திரு ம. பொ. சிவஞானம் அவர்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது அந்த நாட்டின் வளர்ச்சி பற்றியும் மக்களின் மனநிலை பற்றியும் விவரமாகவே தெரிந்துகொள்ள முடிந்தது.

'செல்வம் கொழிக்கும் நாடு' என்று ஒரு நாட்டைக் குறிப்பிட்டுப் பேசும்போது அதன் விவசாய வளம் நம் மனக்கண் முன்னே வந்து நிற்கும். 'பொன் விளையும் பூமி' என்றவுடன் அந்தப் பிரதேசத்தின் பொருளாதார சுபிட்சம் நம் நினைவுக்கு வரும். ஆனால் தகரம் விளைந்து செல்வம் கொடுக்கும் நாடு ஒன்றே ஒன்று இந்தப் பரந்த உலகில் இருக்கிறது என்றால் மலேசியாவும் அதன் இயற்கை வளங்களும்தான் நம் நினைவுத் திரையில் காட்சியளிக்கும். தகரத்துடன் ரப்பரும் சேர்ந்து அந்த நாட்டின் பொருளாதாரத் தரத்தை வெகுவாக உயர்த்தி விட்டிருக்கின்றன.

முழுதாக ஒரு நூற்றாண்டுக் காலம் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்த மலேயாவுக்கு 1957ம் ஆண்டு ஆகஸ்ட் 31ந் தேதி பூரண சுதந்திரம் கிடைத்தது. 'மலேயாவைப் புரிந்து கொண்டவர்கள் ஆசியாவின் நாடித் துடிப்பையே உணர்ந்து கொண்டவர்களாவார்கள்' என்ற சொற்றொடர் வெகு நாட்களாகவே வழக்கத்திலிருந்து வருகிறது. இப்போது மலேயா, சிங்கப்பூர், சாரவாக், வடக்கு போர்னியோ ஆகிய நான்கு ராஜ்யங்கள் ஒன்று சேர்ந்து மலேஷியா சமஷ்டியாக உருவாகியிருக்கிறது. சுமார் ஒரு கோடியே பத்து லட்சம் ஜனத்தொகை கொண்ட இந்த சமஷ்டியில் உலகிலுள்ள அத்தனை வகை மக்களும் இருக்கிறார்கள். இஸ்லாமியர், பௌத்தர்,

தமிழர்கள், இந்தியர், இதில் பெரும் பகுதி. இவர்கள் எல்லோருக்கும் ஒரே பொது விரோதிதான் உண்டு. அதுதான் கம்யூனிஸம்!

திரு சிவஞானத்துக்கு இந்தப் பிரயாணம் எடுத்த எடுப்பிலேயே இரண்டு புதிய அனுபவங்களை அளித்தது. முதலாவது பல கட்சிக் கண்ணோட்டம் உள்ளவர்களும் ஒன்று சேர்ந்து அவரை வழியனுப்பி வைத்தார்கள். இரண்டாவதாக அவருக்கு 'போயிங்' விமானப் பிரயாணம் முதல் தடவையாகக் கிட்டியது.

'நாம் விமானத்துக்குள் அமர்ந்து பிரயாணம் செய்யும்போது நாம் பறக்கும் வேகத்தை ஊகிக்க முடியவில்லை. ஆனால் வான வெளியில் எதிர்த் திசையிலிருந்து வந்து கொண்டிருக்கும் விமானத்தை நம் விமானம் கண் இமைக்கும் நேரத்தில் கடந்து செல்வதிலிருந்து நாம் போய்க் கொண்டிருக்கும் வேகத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. ராம பாணம் என்று இதிகாசங்களில் சொல்கிறார்களே! அந்த ராம பாணம் இப்படித்தான் வேகமாகப் போயிருக்குமோ என்று நினைக்கத் தோன்றியது' என்று ஆரம்பித்தார் அவர்.

நாற்பத்தி எட்டு சதவிகிதத்தினர்தான் முஸ்லிம்கள் இருந்தாலும் மலேயா ஓர் இஸ்லாமிய நாடாகத்தான் பிரகடனப்படுத்தப் பட்டிருக்கிறது. அதை மீதியுள்ள ஐம்பத்திரண்டு சதவிகிதத்தினர் ஆட்சேபிப்பதாகத் தெரியவில்லை. சமயச் சார்புள்ள நாடு என்று பெயரளவில் தொனித்தாலும் அதை ஒட்டிச் சண்டை சச்சரவுகளுக்கு இடம் கொடுத்து மக்கள் வாழவில்லை. காரணம் மக்களில் எல்லாச் சாராருமே மன நிறைவு பெற்றிருக்கிறார்கள். ஜனத்தொகை நிறைந்து உணவுப் பற்றாக்குறை இருந்தால் ஒருவேளை பசிக் கசப்பு உள் பகைமையையும் பூசலையும் வளர்க்கலாம். ஆனால் மலேயாவிலோ ஜனத்தொகை குறைவு. உற்பத்தி அதிகம். வாழ்க்கைப் போராட்டத்தில் போட்டி இல்லை. வறுமை இன்மை நாட்டின் ஐக்கியத்துக்கும் ஒருமைப்பாட்டுக்கும் உறுதுணையாக நிற்கிறது.

வர்த்தக உலகில் சீனர்கள் தொண்ணூற்றி இரண்டு சதவிகிதத்துக்கு வியாபித்து நிற்கிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் நெஞ்சத்தை பீகிங்கிலும் வயிற்றைப் பினாங்கிலும் இணைத்து வாழவில்லை. அவர்கள் தங்களை மலேயர்களாகவே நினைத்து வாழ்கிறார்கள். பீகிங்கை நினைப்பதையோ அங்கு தொடர்பு கொள்வதையோ அவர்கள் மறந்து வெகு நாட்களாகின்றன. இந்த நிலை, மலேயர்களிடம் அவர்களுக்கு நல்ல செல்வாக்கையே ஏற்படுத்தியிருக்கிறது.

சீனாவுக்கும் மலேஷியாவுக்கும் அத்தனை சுமுகமான உறவில்லை. ஆனாலும் அரசாங்கம் மலேயாவாழ் சீனர்கள் யாரையும் சந்தேகிப்பதில்லை. சிங்கப்பூர் முதல் மந்திரியே ஒரு சீனர்தான். அவரைத்தான் ஒரு சந்தர்ப்பத்தில் இந்தோனேஷியாவிடம் சமரசம் பேச துங்கு அப்துர் ரஹ்மான் அனுப்பினாராம்.

ஆரம்பப் பள்ளிகள் மாத்திரம் இனவாரியாக இயங்குகின்றன. நடுத்தர உயர்தரப் பள்ளிகளில் சீனர்கள், மலேயர்கள், தமிழர்கள் எல்லோருமே கலந்து கல்வி கற்பது கண்கொள்ளாக் காட்சியாம்!

மொழிப் பிரச்னை அந்த நாட்டு நிர்வாகத்தில் எந்த விதமான குழப்பத்தையும் தோற்றுவிக்காமல் கவனித்துக் கொள்கிறார்கள். சிங்கப்பூர் சட்டமன்றத்தில் மலாய், தமிழ், ஆங்கிலம், சீனம் ஆகிய நான்கு மொழிகளுமே அரசாங்க மொழிகளாக இயங்குகின்றன. எந்த ஒரு மொழியில் பேசினாலும் மற்ற மூன்று மொழிகளிலும் அந்தக் கணத்திலேயே மொழிபெயர்க்க ஏற்பாடு செய்கிறார்கள். அங்கத்தினர்களுக்கு இந்த ஏற்பாடு மிகவும் சௌகரியமாக இருக்கிறது.

சிங்கப்பூர் ஒரு தீவுதான். முக்கால் மைல் நீளமுள்ள பாலம்தான் இந்தத் தீவையும் மலேயா தீபகற்பத்தையும் இணைக்கிறது. சிங்கப்பூரின் நிலப்பரப்புக்கும் ஜனத்தொகைக்கும் சம்பந்தமே கிடையாது. ஒரே ஜன நெரிசல். இந்த அதீத ஜன நெரிசல் மக்களின் பெரும் பகுதியினரிடையே ஒருவித ஆத்திர வேகத்தையும் தோல்வி மனப்பான்மையையும் தோற்றுவிக்கிறது. அவை ரகசிய சங்கங்கள், கொள்ளை, கொலை, ஸ்டிரைக் முதலியவைகளின் வழியாக மலேயர்கள் விரும்பாத கம்யூனிசத்துக்கே அழைத்துச் சென்றுவிடுமோ என்ற ஐயம் சிலர் மனத்தில் எழுந்ததுண்டு. இது பழைய சிங்கப்பூர். 1959ல் சிங்கப்பூர் சுதந்திரப் பிரதேசமானபோது பிரபல வழக்கறிஞரான லீகுவான் யூவும் அவர் சகாக்களும் பதவிக்கு வந்து சிங்கப்பூரை மாபெரும் சீர்திருத்தத்துக்கு உள்ளாக்கினார்கள்; வெற்றியும் கண்டார்கள்.

மலேயா சிறிய நாடாக இருந்தாலும் டெலிவிஷன் வசதி பெற்றது. அந்த டெலிவிஷனிலும் தமிழ் நிகழ்ச்சிகளுக்கு நிறைய இடம் உண்டு. சமீபத்தில் தமிழர்கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட நேரம் போதாது என்று கேட்டுக் கொண்டதற்கிணங்க நேரத்தை அதிகப்படுத்தினார்கள். இதேபோல் வானொலியிலும் தமிழுக்குத் தனித் துறை உண்டு. தமிழ் புறக்கணிக்கப்படுகிறது என்று கோஷமிட அங்கு இடமே வைத்துக் கொள்வதில்லை!

இங்குதான் திரு சிவஞானத்துக்கு மற்றொரு வாய்ப்புக் கிட்டியது. அவர் டெலிவிஷன் தமிழ் நிகழ்ச்சியில் தோன்றினார். சும்மா தோன்றவில்லை. சரியான மேக்கப்புடன் தோன்றினார். அவருக்கு ஒப்பனை செய்தது ஒரு சீனப் பெண். தூய தமிழில் பேசிக்கொண்டே அவள் ஒப்பனை செய்தாளாம். ரேடியோவில் பேசுவது போல் மைக் முன் நின்றுவிட முடியாதே! காமிராவுக்கு முன் நிற்க வேண்டுமல்லவா?

நாற்பத்தி எட்டு சதவிகிதத்தினருக்கு மாத்திரம் தாய் மொழியாகவும் சமஷ்டி மொழியாகவும் மலாய் பாஷை விளங்கினாலும் அந்த மொழி அங்குள்ள அனைவருக்குமே நன்கு தெரியும். காரணம் மலாய் மொழி போதிய வளர்ச்சி அடையாததுதான். ஆறாம் வகுப்புக்கு மேல் பயன்படக் கூடிய மலாய் மொழிப் புத்தகங்கள் கிடையாது. மொழியை வளப்படுத்த அரசாங்கம் தீவிர முயற்சி எடுத்து

வருகிறது. மலாய் மொழியை ரோமன் லிபியிலே கையாளுவதால் எல்லோருக்கும் எளிதாகப்படுகிறது; கலபமாகக் கற்றுக் கொண்டு பேசி விடுகிறார்கள்!

இதற்காக மலாய் மொழியில் எழுதத் தடையில்லை. உருது மொழி லிபி போல்தான் மலாய் மொழி லிபியும் இருக்கிறது.

நாகரிகத்தில் மலேயர்களும் சீனர்களும் ஐரோப்பிய பாணியைத் தீவிரமாகவே பின்பற்றுகிறார்கள் என்று சொல்லலாம். குறிப்பாக ஆகார விஷயத்திலும் இந்த நியதிதான். தமிழர்கள் இதற்கு விதிவிலக்கு.

விதிவிலக்கு இல்லாத பண்டிகைகளும் கொண்டாட்டங்களும் இங்கு நிறைய உண்டு. ஓர் இனத்தின் பக்தி கலாசாரங்களுக்கு மற்ற இனத்தினர் அனைவரும் மதிப்புக் கொடுக்கிறார்கள். மலாய்க்காரர்களின் ரம்சான் பண்டிகையில் சீனர்கள், தமிழர்கள் எல்லோரும் ஆர்வத்துடன் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். சீனர்களின் புத்தாண்டு விழாவிலும் இப்படியே! இதற்கெல்லாம் தலைவர்கள் வழிகாட்டிகளாய் விளங்குகிறார்கள். தமிழர்களின் தைப்பூச விழா அரசாங்கத்தின் பொது விடுமுறை அந்தஸ்தைப் பெற்றிருக்கிறது.

இந்த நாட்டில் ரஸ்தாப் போக்குவரத்துக்கள் கவர்ச்சிகரமாக இருக்கின்றன. தொடர்ந்து நான்கைந்து மைல்களுக்கு வளைவு நெளிவு இல்லாத சாலைகள். ரஸ்தாக்களில் தாரை மாத்திரம் அவர்கள் உபயோகிப்பதில்லை. கணிசமான அளவில் ரப்பரையும் கலக்கிறார்கள். மேடு பள்ளம் விழாத இந்தப் பாதைகளில் காரோட்டிகள் சர்வ சகஜமாக நூறு மைல் வேகத்தில் போகிறார்கள். மாட்டு வண்டிகளோடு, ஆடு மாடு மந்தைகளும் குறுக்கிட்டு வேகத்தைக் குறைக்குமோவென்று அவர்கள் அஞ்ச வேண்டியதில்லை. அவை அங்கு வெகு வெகு குறைவு. மலேயா விவசாய நாடு இல்லை. சிறிய அளவில் நடக்கும் விவசாயமும் நாட்டின் உட்பகுதிகளில் ஒதுங்கி விருக்கிறது. இயற்கைச் செல்வங்களான தகரம், ரப்பர், எண்ணெய் மூன்றும் ஏராளமான அன்னியச் செலாவணி வசதியை அளிக்கின்றன. ஆகையால் வாழ்க்கைத் தரமும் அதிகம்தான். மலேயர்கள் இந்த வாழ்க்கைத் தர உயர்வை விரும்புகிறார்கள்.

இயற்கைப் பொருள்களின் துணைகொண்டு எழக் கூடிய தொழில் வளர்ச்சி இங்கு இல்லை. இப்போதுதான் மலேய சர்க்கார் தொழில் துறையில் கவனம் காட்டுகிறார்கள்.

உயர் கல்விக்கான வசதிகளும் இனிமேல்தான் இங்கு தோன்ற வேண்டும். பாரிஸ்டர், இஞ்சினியர், படிப்புகளை விரும்பும் இளைஞர்கள் இங்கிலாந்துக்கும் மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கும்தான் போகிறார்கள்!

மலேயாவாழ் தமிழர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் திரு சிவஞானம், 'அவர்கள் காட்டும் அன்பு நாம் பழந்தமிழ் இலக்கியங்களில் காணும் அன்புக்கு ஒப்பிடக் கூடியதாக இருக்கிறது. பாரதத்திலிருந்து வருபவர்களுக்குப் பரம உபசாரம் செய்கிறார்கள். அவர்களுக்கு மலேயா அரசாங்கத்திடம் கொஞ்சம்கூடக் குறை இல்லை'' என்றார்.



துங்கு அப்துர் ரஹ்மானுடன் ம. பொ. சி.

மாரியம்மனுக்கும் தண்டபாணிக்கும் மலேயாத் தமிழர்கள் விசேஷ பக்தி காட்டிக் கோயில்கள் எழுப்பியிருக்கிறார்கள். மாரியம்மனை அவர்கள் தங்கள் தேசியக் கடவுளாகவே கருதுகிறார்கள். செட்டிநாட்டு வணிகர்கள் அங்கு போய் முருகனுக்கு எழுப்பியிருக்கும் கோயில்களும் பிரசித்தமானவை.

கோலாலம்பூர்தான் மலேஷிய சமஷ்டியின் தலைநகர். கோலாலம்பூரை அமெரிக்காவின் வாஷிங்டனுக்கு ஒப்பிட்டால் சிங்கப்பூரை, நியூயார்க் நகருக்கு ஒப்பிடலாம்.

ஆசியாவின் இரு மூலைகளும் சந்திக்கும் இடம் சிங்கப்பூர். சிங்கங்கள் நிறைந்ததினால் 'சிங்கபுரம்' என்று ஒரு காலத்தில் அழைக்கப்பட்டுக் கடைசியில் சிங்கப்பூராகத் திரிந்தது. அதை இப்போது ஜிங்ஜிங்பூர் என்று அழைத்தாலும் தகும். காரணம் மலேய நாணயமான டாலர்கள் குலுங்கும் ஜிங் ஜிங் ஒலி அங்கு எப்போதும் எதிரொலிக்கிறது. சிங்கப்பூர் இப்போது ஒரு செல்வப்பூர்!

பாரதத்திலோ பாகிஸ்தானிலோ இடைறென்று ஒலிக்கும் ஹிந்து முஸ்லீம் கலவரம் என்பது மலேயாவில் உள்ள ஹிந்து முஸ்லீம்களுக்குப் புரியாத ஒரு விஷயம்! அங்கு அவர்கள் அத்தனை அன்னியோன்னியமாக வாழ்கிறார்கள்.

திரு சிவஞானம் துங்கு அப்துர் ரஹ்மானையும் சந்தித்தார். துங்கு இந்திய பாணியில் கரம் கூப்பித்தான் வரவேற்றாராம். காரணம் அங்குள்ள பழக்க வழக்கங்களில் இந்திய நாகரிகம் கணிசமாக இருக்கிறது. அரசியல் முறைகளிலும் இந்தப் பண்புகள் ஊடுருவி நிற்கின்றன.

துங்குவைச் சந்தித்து விட்டு விடை பெறும் போது அவர் சிவஞானத்திடம் ''இங்குள்ள உங்கள் நாட்டவரை இந்த நாட்டுக் குடியுரிமை பெறச் செய்யுங்கள். அது பரஸ்பரம் வளர்ச்சிக்கு உதவும்'' என்று சொன்ன வார்த்தைகள் அவர் செவிகளில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

'பொது மொழி ஆனபிறகுதான் ஒரு மொழி ஆட்சி மொழியாக முடியும். ஆட்சி மொழியான பிறகு அதைப் பொது மொழியாக்குவது கடினம்' என்ற தத்துவத்தையும் திரு சிவஞானம் தம் மலேயா சுற்றுப் பிரயாணத்தின்போது நன்கு உணர்ந்தார்.

— நிருபர்

# 19. வரம் பெற்றான்!

சூரபன்மன் தாயின் கட்டளைப்படி, வேள்வி செய்வதற்காகத் தம் தம்பியரும் சேனைகளும் சூழ, விண்ணும் மண்ணும் கடலும் குல மலைகளும் நடுங்கும் வண்ணம் வடதிசை நோக்கிச் சென்றான்.

அப்பொழுது அசுர குருவாகிய சுக்கிராச்சாரியார் ஆகாய வழியாக விமானத்தில் வந்தார். அசுர சேனைகளின் வேகத்தைக் கண்டு நடுங்கினார். 'இவர்களுக்கு நிகரானவர் ஒருவரும் இல்லை. மாலயனாதி வானவர்களை இவர்கள் கணப்பொழுதில் வென்று

## கந்தன் கருணை



விடுவார்கள்' என்று பலவாறு எண்ணி வியந்தார். உயிர்களை வசீகரிக்கும் ஒரு மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு சுந்தர வடிவுடன் சேனைக் கடலின் நடுவே புகுந்து சூரபன்மன் முன் சென்றார். ''சூரனே! நீ இந்திரன் முதலிய அனைவரையும் வென்று யாவருக்கும் தலைவனாகக் கடவாய்'' என்று ஆசி கூறினார். சூரபன்மன் சுக்கிராச்சாரியாரை நோக்கி, ''ஐயனே! தாங்கள் யார்? இங்கு வந்த காரணம் யாது? தங்களைக் கண்டவுடனே என்னை அறியாது என் உள்ளமும் எலும்பும் உருகுகின்றன'' என்றான்.

''சூரா! நான் உன் குல குரு சுக்கிராச்சாரியார். உனக்கு ஆறுதல் கூற வந்திருக்கிறேன். நீ தவம் செய்யும்போது பகைவர்கள் உனக்குத் தொல்லை கொடுப்பார்கள். அத் துன்பங்களைப் போக்க ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன். இந்த மந்திரத்தை நாள்தோறும் ஜபித்துப் புலன்களை யடக்கிப் பெருந் தவம் செய்'' என்று கூறிச் சிவபெருமானுடைய மந்திரம் ஒன்றை அவனுக்கு உபதேசித்தார். சூரபன்மன் சுக்கிராச்சாரியாரின் கால்களில் விழுந்து வணங்கி மந்திரத்தைக் கிரகித்தான். அவர் விதித்த வண்ணமே தவம் செய்வதாகக் கூறினான்.

அசுரர்கள் சூழச் சென்ற சூரபன்மன் ஓர் ஆலவனத்தை அடைந்தான். அங்கே வீர வேள்வி செய்வதற்குச் சாலையமைத்தான். பதினாயிர யோசனைப் பரப்பை உள் வைத்து அதனைச் சுற்றிலும் மலை




## திருமுருக கிருபானந்தவாரியார்




களினாலே மதில் அமைத்தான். மதில்களைச் சுற்றிலும் எண்ணற்ற அசுரர்களைக் காவல் வைத்தான். நான்கு திசைகளிலும் வாயில்கள் அமைத்து அவற்றைக் காவல் செய்ய வீர மடந்தையை மந்திரத்தால் அமைத்தான். மதிலைச் சுற்றிலும் காவல் செய்வதற்காகப் பூதங்களையும் பிசாசுகளையும் காளிகளையும் மந்திரத்தால் அமைத்து நிறுத்தினான். மந்திர பலத்தாலேயே வைரவர்களை அமைத்து யாகத்தைக் காவல் காக்க நிறுத்தினான். மதிலுக்குள்ளே நடுவில் ஆயிரம் யோசனை* அகலமும் ஆழமும் உள்ள ஓர் ஓமகுண்டமும், அதனைச் சுற்றி நூற்றெட்டு ஓம

குண்டங்களும், அவற்றைச் சுற்றி ஆயிரத்தெட்டு ஓமகுண்டங்களும் செய்வித்தான். யாகத்துக்கு வேண்டிய மற்றைய பொருள்களுக்காகத் தன் தாய் மாயையை நினைந்தான் சூரபன்மன்.

தவம் செய்து சிவபெருமானுடைய அருள் பெற்ற மாயை சூரபன்மன் முன் தோன்றி யாகத் திரவியங்களாகச் சிங்கம், புலி, யானை, கரடி, குதிரை, ஆடு முதலிய மிருகங்களின் மாமிசம், இரத்தம், மற்றும் எண்ணெய், நெய், பால், தயிர், மது, வெண் கடுகு, மிளகு முதலிய திரவியங்கள், நெய்யன்னம், யாகப் பசுக்கள், செந்நெல், அரிசி, மலர், கஸ்தூரி முதலிய சுகந்த வஸ்துக்கள், சுருக்குச் சுரவம், தர்ப்பை, நெற்பொரி, நவதானியங்கள், நச்சு சமித்து முதலியவற்றை வரவழைத்து மலைபோல் குவித்து விட்டாள்.

சூரபன்மன் நடுவேதியின் மத்தியில் வச்சிர கம்பத்தை நாட்டி, நான்கு வாயில்களுக்கும் சென்று வீர மடந்தையைப் பூசித்து மாமிச பலி கொடுத்தான். மதில் நடுவிலுள்ள பூதங்களுக்கும் பிசாசுகளுக்கும் பலி கொடுத்தான். ஆயிரத்தெட்டு குண்டங்கள் தோறும் நச்சு விறகிட்டு, அக்கினி மூட்டினான். தன் தம்பியரோடு சிவபெருமானின் நாமத்தை உச்சரித்து மாமிச பலி கொடுத்தான். தாரகனை நோக்கி, ''நீ இக் குண்டங்கள்தோறும் அக்கினி தணியாது வளர்ப்பாயாக'' என்று கட்டளையிட்டான். பின்னர் நூற்றெட்டு குண்டங்களுக்குச் சென்று வேள்வி செய்தான். சிங்கமுகாசுரனை நோக்கி, ''நீ இங்கிருந்து இக் குண்டங்கள்தோறும் தீ குறையாமல் வளர்ப்பாயாக'' என்று பணித்தான். அங்கிருந்து நடு வேள்விக் குண்டம் சென்ற சூரபன்மன் சிவபெருமானைத் தியானித்து விதிப்படி பூசை செய்தான். நெய், பொரி, உதிரம், மாமிசம் முதலியவற்றைச் சொரிந்து, சிவமந்திரத்துடன் வேள்வி செய்யலானான்.

குண்டத்திலிருந்து தோன்றிய யாகாக்கினி வானளாவியது; எட்டுத் திசைகளையும் மேலுலகங்களையும் சுட்டது. திருமால், பிரமன் முதலியோர் அதனைக் கண்டு நடுங்கினார்கள். சூரபன்மன் தம் தம்பியருடன் பதினாயிரம் ஆண்டுகள் வேள்வி செய்தான். ஆயினும் சிவபெருமான் தரிசனம் கிடைக்கவில்லை. அதனால் மிகவும் வருந்திய சூரபன்மன், தம் தம்பியரை யாகத் தொழிலில் அமர்த்தி விட்டு ஆகாயத்தை அடைந்தான். ஆகாயத்தில் நின்றுகொண்டு தன் தசைகளை வாளினால் அறுத்து ஓமகுண்டத்தில் போட்டு உதிரத்தை நெய்போல் சொரிந்தான். தசைகளை அரிய அரிய அவை முன்போல் மீண்டும் மீண்டும் வளர்ந்தன. அதனைக் கண்ட சூரபன்மன் ''இது சிவபெருமானின் திருவருள்'' என்று எண்ணி, விண்ணில் நின்ற வண்ணமே தன் உடலின் தசைகளை அறுத்துப் போட்டும் உதிரம் சொரிந்தும் ஆயிரம் ஆண்டுகள் யாகம் செய்தான். அப்போதும் சிவபெருமான் காட்சி தரவில்லை. அதனால் மனச்சோர்வு கொண்ட சூரபன்மன் ''இனி மாள்வேன்'' என்று கூறித் தீயினால் சூழப்பட்ட ஆதி குண்டத்தில் செந்நிறத்துடன் நிற்கின்ற வச்சிர கம்பத்தில் பாய்ந்து சாம்பலானான்.

சூரபன்மன் யாகாக்கினியில் வீழ்ந்து இறந்ததைக் கண்ட சிங்கமுகனும் தாரகனும் தாயை இழந்த கன்று போல் கதறினார்கள். தன் தமையன் இறந்த பின் தான் உயிரோடு இருக்கலாகாது என்று சிங்கமுகன் கருதித் தன் ஆயிரம் தலைகளையும் அறுத்துச் சூரபன்மன் வீழ்ந்திறந்த ஆதி குண்டத்தில் போட்டான். தலைகளை அறுக்க அறுக்க அவை வளர்ந்தன. அதனைக் கண்ட தாரகன் தன் தலையை அறுத்து அக்கினியில் போட்டான். அவனுக்கும் தலைகள் வளர்ந்து கொண்டேயிருந்தன. இருவரது தலைகளும் அறுக்க அறுக்க வளர்வதைக் கண்ட அசுரர்களில் சிலர் தங்கள் தலைகளையும் அறுத்து யாகாக்கினியில் இட்டனர்.

சூரபன்மனைப் போலவே யாகாக்கினியில் வீழ்ந்து இறக்க எண்ணிய சிங்கமுகன் ஆகாயத்தில் எழுந்தான். அவுணராயினும் அவர்களுக்குள்ள இட சங்கல்பத்தையும் சகோதர வாஞ்சையையும் ஆண்டவன் மெச்சத்தானே வேண்டும்? எனவே, சிவபெருமான் வயோதிக அந்தணர் வேடத்தில் யாக வேதியின் அருகே பிரசன்னமானார். சிங்கமுகாசுரனை நோக்கி, ''நீங்கள் எல்லோரும் ஏன் இங்கே புலம்பி அழுது கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் வரலாற்றைக் கூறுங்கள்'' என்று கேட்டார்.

'இவர் நமது தந்தையைப் போன்றிருக்கிறார்' என்று எண்ணிய சிங்கமுகன் அவரை வணங்கித் தங்களுடைய வரலாற்றைக் கூறினான். வயோதிக அந்தணர் சிங்கமுகனை நோக்கி, ''வருந்த வேண்டாம்; இப்பொழுதே சூரபன்மனை யாகாக்கினியினின்றும் எழுப்பித் தருகிறேன்'' என்று அருளிச்

# அதிசயமான புதுமுறை தயாரிப்பு

## பெப்ஸோடெண்டின் அற்புத நுரை உங்கள் பற்களின் வெண்மையை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள்: புது முறைப்படி தயாராகும் பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இந்த அற்புத நுரை பற்களைப் பாழாக்கும் பழுப்பை அகற்றி அவைகளை இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கச் செய்கிறது...வாயைச் சுத்தம் செய்வதுடன் பெப்பர்மிண்டின் சுவையையும் அளிக்கிறது.




இந்துஸ்தான் லீவர் லிமிடெட் இந்தியாவில் தயாரிப்பது

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான லெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான லெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்திஞலும், பெருமிதத்திஞலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக் கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்திஞல் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**







மற்றும் கிடைக்கும் பாமாலிவ் டால்க் வகைகள்—
மயக்கும் 17 ஜெண்டுகளின் அற்புதமான கலவை

செய்து தேவ கங்கையை அங்கு வரும்படி திருவுளம் செய்தார். கங்கை வந்து சிவபெருமானைப் பணிந்தாள். கங்கா நதியை அவர் நடுக் குண்டத்தில் புகச் செய்தார். நடுக் குண்டத்தில் கங்கை புகுந்ததும் சூரபன்மன் ஆர்த்தெழுந்தான். சிங்க முகனும் தாரகனும் பெரு மகிழ்ச்சி யடைந்தார்கள். அசுரர்கள் ஆ ர வா ர ம் செய்தார்கள். இவற்றையெல்லாம் கண்ட தேவர்கள் அழிந்த அவுணன் உயிர் பெற்றானே எனக் கலங்கி அஞ்சி நடுங்கி ஓடி ஒளிந்து கொண்டார்கள்.

**வ**யோதிக அந்தணர் வடிவத்தில் வந்த சிவபெருமான் தம் வயோதிக வடிவத்தை நீக்கி, விடையின் மீது மூன்று கண்களும் நான்கு தோள்களுமாய் உமாதேவியாருடன் காட்சி தந்தருளினார். சூரபன்மன் தம் தம்பியரோடும் துணைவரோடும் கீழே வீழ்ந்து வணங்கிப் பலவாறு துதித்து நின்றான்.

''சூரபன்ம! நீ நம்மை நினைந்து, நெடுங்காலம் பெருந்தவம் செய்து இளைத்தாய். உனக்கு என்ன வரம் வேண்டும்? சொல்'' என்று கேட்டார் சுவாமி.

இத்தனை தவம் செய்தும் அதனால் மன அமைதியும் முக்தி நாட்டமும் பெறாத அசுரத் தன்மை அப்போது சூரன் வாய்மொழியில் வெளியாயிற்று. தாய் புகட்டியிருந்த ஆட்சி அதிகார ஆசையை வெளியிட்டான்.

''எம்பெருமானே! இப்பிருதிவியில் உள்ள எல்லா அண்டங்களுக்கும் நான் அரசனாக வேண்டும். அந்த அண்டங்களை ஆள்வதற்குரிய ஆக்ஞா சக்கரமும், நினைத்தவுடனேயே அவ்விடங்களுக்குச் சென்று திரும்பும் ஊர்தியும் வேண்டும். எப்பொழுதும் அழியாதிருக்கின்ற யாக்கையும், திருமால் முதலிய தேவர்களை வெல்லும் படைக் கலங்களையும் தந்தருள வேண்டும்'' என்று சூரபன்மன் வேண்டிக் கொண்டான்.

''சூரபன்ம! நீ இப்பிருதிவியிலுள்ள ஆயிரம் கோடி அண்டங்களுள் ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் ஆளக் கடவாய்'' என்று சிவபெருமான் அருள் செய்தார். (என்றும் வாழும் வரத்தை அளிக்கவில்லை.) ஆயிரத்தெட்டு அண்டங்கள் எங்கும் செல்லத் தக்க வலிமை மிக்க இந்திர ஞாலம் என்னும் தேரையும், ஆக்ஞா சக்கரத்தையும், சிங்க வாகனத்தையும், தேவர்கள் யாவர்க்கும் முதல்வனாகும் தலைமையையும், யாவரையும் வெல்லும்

## வலியும் மருந்தும்!



வீரத்தையும் ஆற்றலையும், பாசுபதம் முதலிய தெய்வாஸ்திரங்களையும், வச்சிர உடலையும் சிவபெருமான் தந்தருளினர். இதன்பின், யாகசாலையில் புகுந்து சூரனுயிரை மீட்ட தேவ கங்கையை விண்ணுலகுக்கு அனுப்பினர்.

தேவ கங்கை கலந்த யாகாக்கினியிலிருந்து பதினயிரம் கோடி வெள்ளம் அசுர சேனைகளைத் தோற்றுவித்துச் சூரனுக்குக் கொடுத்தார் பிரமன். சூரபன்மனுக்கு சிவபெருமான் அருள் புரிந்த போது, சூரனுடைய தம்பியராகிய சிங்கமுகனும் தாரகனும் சிவபெருமானின் திருவடிகளை வணங்கினர்கள். சிவபெருமான் அவர்களை நோக்கி, ''நீங்களிருவரும் சூரபன்மனுக்கு இரு தோள்களைப் போல் நூற்றெட்டு யுகங்கள் சிறப்போடு வாழுங்கள். நீங்கள் தேவர் அனைவரையும் வென்று புகழ் பெறுவீர்கள். உங்கள் மூவரையும் நம் சக்தி ஒன்ருலன்றி வேறு எவராலும் வெல்ல முடியாது'' என்று அருளிச் செய்து அழியாத தேர், பாசுபதாஸ்திரம் முதலியவற்றை அவர்களுக்குத் தனித் தனியாகக் கொடுத்து மறைந்தருளினர்.

சிவபெருமானிடம் அளவற்ற வரங்களைப் பெற்ற சூரபன்மனை அசுர சேனைகள் வந்து சூழ்ந்து கொண்டு துதி செய்தனர்; மகிழ்ச்சியுடன் கடல் போல் ஆரவாரித்தனர்.

மேருகிரியை ஏழு கடல்களும் சூழ்வது போல் சூரபன்மனை அசுரர்கள் சூழ்ந்துகொள்ள, மண்ணும் விண்ணும் நிறைந்து சூரபன்மன் தம்பியருடன் யாகசாலையை விட்டுப் புறப்பட்டு காசிப முனிவரிடம் வந்து வணங்கினன்; சிவபெருமானிடம் தான் பெற்ற வரங்களையெல்லாம் கூறி, ''இனி நாம் செய்வது யாது?'' என்று வினவினன். தேவர்கள் வாழ்வு தீர்ந்தது என்று எண்ணிய காசிபமுனிவர், ''உங்கள் குலகுருவாகிய சுக்கிராச்சாரியாரிடம் செல்லுங்கள்'' என்று விடை கொடுத்து அனுப்பினர்.

அதேபோல் சூரபன்மன் தன் சேனைகளுடன் சுக்கிராச்சாரியாரை வந்தடைந்தான்.

''பதி, பசு, பாசம் என்று முப்பொருள் உள என்று சிலர் கூறுவர். பதியும் பசுவும் ஒன்றே. முத்தியென்பதொன்றில்லை; பாப புண்ணியமில்லை. எதைச் செய்ய வேண்டுமென்றாலும் செய்யலாம். மறுபிறப்பு என்று ஒன்று கிடையாது. நீயே பிரம்மம். எனவே பிரமன், திருமால் முதலிய தேவர்களை மேலோர் என்று கருதி வணங்காதே'' என்று தொடங்கினர் சுக்கிரர். பாப புண்ணியத்தை மீறி, பிரம்ம பாவத்திலிருப்பவனுக்கு உலக காரியங்கள் கிடையாது. ஜீவன் பிரம்மம் என்கிற கொள்கை அவனை எந்தக் காரியத்திலும் ஏவாத தத்துவம்; கர்மம் கடந்த நிலை அது. ஆனல் சுக்கிரனே சூரனைக் கெட்ட காரியத்தில் ஏவுவதற்குச் சாதகமாக 'நீயே பிரம்மம்; உனக்குப் பாவ புண்ணியமில்லை; எது வேண்டுமாயினும் செய்யலாம்' என்று திரித்துக் கூறினர்.

''தொடர்ந்து, தேவர்கள் உனக்குப் பகைவர்கள். அவர்கள் செல்வங்களைக் கவர்ந்து, அவர்களைத் தண்டிப்பாயாக! இந்திரன் முன்னர் அளவற்ற அசுரர்களை அழித்தான்; அவனைப் பிடித்துச் சிறையில் வை. மனம் விரும்பியபடியெல்லாம் செய். முனிவர்களையும் திக்குப் பாலகர்களையும் ஏவலாக்கிக் கொள்; கொலை, களவு, காமம், வஞ்சம் முதலியவற்றை உறுதி யென்று செய். அதனல் உனக்குத் தீமை ஏதும் இல்லை; சிவபெருமான் உனக்குத் தந்த ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் சென்று ஏவல் கொண்டு வருவாய்'' என்று சுக்கிராச்சாரியார் அவனுக்கு உபதேசித்தார்.

சுக்கிராச்சாரியார் கூறியதைக் கேட்ட சூரபன்மன், ''குருநாதா! உங்கள் கட்டளைப்படியே நடக்கிறேன்'' என்று கூறி, சிவபெருமான் அளித்த ஆயிரத்தெட்டு அண்டங்களின் பரப்புக்களையும் கூறும்படி வேண்டிக் கொண்டான். அதன்படி சுக்கிராச்சாரியார் அண்டங்களின் பரப்புக்களைக் கூறினர். சுக்கிராச்சாரியாரின் திருவடிகளை வணங்கிச் சூரபன்மனும் சிங்கமுகாசுரனும் விடைபெற்றுச் சென்றனர். தாரகனிடம் சென்றதும், தனக்குச் சுக்கிராச்சாரியார் உபதேசித்தவற்றையெல்லாம் கூறினன் சூரபன்மன்.

அது சமயம் மாயை ஆகாயத்தில் வந்து தோன்றினள். சூரபன்மன் தன் தம்பியரோடும், அசமுகியோடும் சென்று அவளை வணங்கினன். மாயை தன் மக்களை வாழ்த்தி ''மைந்தர்களே! நீங்கள் பெற்ற வரத்தினல் இந்திராதி தேவர்களை வென்று எல்லா உலகங்களையும் அரசு புரிந்து, நீண்ட காலம் வாழ்வீராக! நீங்கள் மாயை செய்ய வேண்டும் என்று எண்ணினல் என்னை நினையுங்கள். நினைத்தபோது நான் வந்து உங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பேன்'' என்று கூறிச் சென்றாள்.

மாயை சென்றதும் சூரபன்மன் திக்கு விஜயம் செய்யப் புறப்பட்டான். அசுரப் படைகள் வடதிசை நோக்கி ஆரவாரத்தோடு புறப்பட்டன. (தொடரும்)



# எழிலோவியமான

# பிரிண்டுகள்

பிரிண்டுகளிலே நாகரீகத்தின்
உச்சம். கண்கொள்ளா வியப்பு,
பூரிப்பு, கற்பனை கடந்த வனப்பு:
அவைதாம் பங்கள் வாயில்கள்,
சின்ட்ஸுகள், பாப்லின்கள்,
மற்றும் பிறவகைகள், நவீன
பாணிகளும், பழம்பெரும்
பாணிகளுமாக, பல்வேறு
வண்ண வகைகளிலே கொள்ளை
கொள்ளும் உங்களை. சால்வர்
கமீஸ் உடுப்பாக, நல்லாடையாக,
சேலையாக, இனிதவழும்
விளையாட்டுடையாக, உங்களை
நாகரீக எழிலோவியமாக்கக்
காத்திருப்பவை. உங்கள்
உள்ளம் விரும்பும் வனப்போடு
உருப்பெற்ற நெசவு.

**சாயாஜி மில்ஸ் நம்பர் 1, பரோடா**

அஹமதாபாத், சாயாஜி மில்ஸ் லிமிடெட்டின் ஒரு பிரிவு ஜகப்பலட்சுமி மில்ஸ் லிட்., கேம்பே.

81-BP-15

# ஜீவகீதம்

ஜெகசிற்பியன்

அத்தியாயம் பதினொன்று

## அண்ணனும் தங்கையும்

அந்தச் சிலையின் அபார அழகும், கற்பனையை வெல்லத் தக்க கம்பீரத் தோற்றமும் சபேசன் மனத்தில் வியப்புணர்ச்சியை நிரப்பி அங்கு சூழ்ந்திருந்த பயத்தை விரட்டியடித்தன.

'இவ்வளவு பெரிய மாவீரன் இங்கே காவலாக இருக்கும்போது எனக்கு என்ன பயம்?' என்று எண்ணியவாறு மேடைத் தளத்தில் ஒருக்களித்துப் படுத்தான். பகலெல்லாம் எரித்த வெயில் உஷ்ணத்தை வாங்கி உள்ளடக்கி வைத்திருந்த அந்தக் கருங்கல் தளம் அவன் உடம்புக்கு வெகு சுகமாக இருந்தது. பஞ்சணையில் படுத்தால்கூட இத்தனை இனிய கதகதப்பு கிடைக்குமா என்பது சந்தேகமே. ஆனால் தலைதான் ரொம்பவும் உறுத்தியது. நேரமாக ஆக அவ்வுறுத்தல் அதிகமாகி அவனுடைய சுக நித்திரைக்குப் பங்கம் விளைத்தது.

தொலை தூரத்திலிருந்து கடலின் அலையோசை உலகத்திலுள்ள விதவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து ஒப்பாரி வைத்து அழுவது போல் இடைவிடாது கேட்டுக் கொண்டிருந்தது. கோட்டைப் பக்கமிருந்த படை வீரர்களின் முகாமிலிருந்து ஏதோ ஒரு சங்கேதக் குறிப்பை உணர்த்தும் பொருட்டுக் குழலோசை எழுந்து ஓய்ந்தது. ரிப்பன் மாளிகைக் கடிகாரமும், சென்ட்ரல் ஸ்டேஷன் கோபுரக் கடிகாரமும் தங்களுக்கு வயதாகி விட்டதாலோ அல்லது தமக்குள் ஏதேனும் பிணக்குக் கொண்டோ, மணி இரண்டு என்பதை ஒன்றன்பின் ஒன்றாகச் சில விநாடிகள் நேர வித்தியாசத்துடன் முழங்கி அறிவித்தன.

மெல்ல எழுந்து நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். தலைக்கு உயரமாக வைத்துக்கொள்ள ஏதாவது இருந்தால் நன்றாயிருக்கும். அது கல்லாக இருந்தாலும் பரவாயில்லை. கல்லின்



மேல் புல்பூண்டு செடிகளைப் பிடுங்கிப் பரப்பி விட்டுப் படுத்தால்—ஆகா, என்ன ஆனந்தமாகத் தூங்கலாம்!

சாலையின் மறுபக்க நடைபாதையோரம் வரிசையாக வளர்ந்திருந்த ஆலமரங்களின் கிளைகளில் ஏதோ மூட்டை மூட்டையாகத் தொங்கிக் கொண்டிருப்பது அவன் கண்ணில் தென்பட்டன. அவை என்னவாக இருக்கும் என்ற யோசனையுடன் அவ்விடத்தை நோக்கி நடந்தான்.

பசு மாடு கன்று ஈனும்போது வெளிப்படும் நஞ்சுக் கொடியைக் கோணியில் சுற்றிப் பொதிந்து பால் சுரப்புள்ள மரங்களில் கட்டி வைத்தால் மாடு நிறைய பால் கறக்கும் என்பது ஒரு நம்பிக்கை. இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே அந்த ஆலமரக் கிளைகளில் ஏராளமான கோணி மூட்டைகள் கட்டித் தொங்க விடப்பட்டிருந்தன. பட்டணத்துப் பால்காரர்களுக்கு இம்மாதிரி நம்பிக்கையெல்லாம் இருப்பது அதிசயமல்லவா?



சபேசன் மகிழ்ச்சி யடைந்தான் — அந்த விசித்திர நம்பிக்கையை நினைத்து அல்ல; அங்கே தொங்கும் கோணி மூட்டைகளில் ஒன்றை அறுத்தெடுத்துக் கொண்டு வந்து தலைக்கு அணையாக வைத்து நிம்மதியாகத் தூங்கலாம் என்பதற்காக!

எண்ணம் உடனே செயலாகியது. மன்றோ சிலைக்குக் கீழே கருங்கல் தளத்தில் அந்தக் கோணி மூட்டையைத் தலையணையாக வைத்துக்கொண்டு சுருண்டடித்துப் படுத்த சபேசன் சற்றைக்கெல்லாம் நன்றாகத் தூங்கியும் விட்டான்.

இரவு மணி மூன்று இருக்கும்.

நல்ல உறக்கத்திலிருந்த சபேசனை யாரோ சீண்டி யெழுப்புவது போல் இருக்கவே அவன் புரண்டு படுத்தான்.

''இன்னு, தூங்கறயா?''

சபேசனின் உறக்கம் கலையவில்லை. அவனுடைய முகத்துக்கு அருகே இன்னொரு முகம் குனிந்து பார்த்தது. ''ஓ, நச்சியாக்கும்னு நினைச்சுப்பிட்டேன்!... இது வேறே யாரோ!''

சபேசன் சவம் போல் கிடந்து தூங்கிக் கொண்டிருந்தான். அந்த நிம்மதியான தூக்கத்தில் அவன் ஏதோ இன்பக் கனவு கண்டிருக்கவேண்டும். ''போம்மா, எனக்குச் சாப்பாடு வேண்டாம்!.... நான் அப்பாவோடு தான் சாப்பிடுவேன்! அவர் வரட்டும்! இப்போ கப்பலில் வந்துவிடுவார்!'' என்று கொஞ்சலான குரலில் உளறினான் அவன்.

இந்த உளறலைக் கேட்டு அருகிலிருந்த உருவம் திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்தது. ''ஐயோ, பாவம்! குயந்தைப் புள்ளே! ஆத்தாக்காரியை நினைச்சுக்கிட்டுப் பினாத்துதாக்கும்!'' என்று துயரம் கப்பிய குரலில் முணுமுணுத்துக்கொண்டே தன் கந்தல் சேலையின் முந்தியைப் பாதியாகக் கிழித்தெடுத்துக் குளிரில் நடுங்கியவாறு சுருண்டடித்துப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த சபேசனின் முகத்தைப் போர்த்திவிட்டு அங்கிருந்து மெல்ல இருளில் நழுவிச் சென்றது அவ்வுருவம். அது வேறு யாருமல்ல; நாயர் கடையில் டீ வாங்கிக் குடித்துவிட்டுப் போன அந்தச் சாமந்திப்பூ சிங்காரிதான்!

நுங்கம்பாக்கம் ஏரிப் பகுதி அது. ஏரி என்றதும் ஏதோ கண்ணுக்கு எட்டிய தூரம்வரையில் ஒரே நீல நீர்ப் பரப்பாயுள்ள ஏரியையும், அதன் கரை மேடுகளில் வானளாவி உயர்ந்து நிற்கும் பனை மரங்களையும், செழித்தடர்ந்த தாழம் புதர்களையும், மூங்கில் போத்துக்களையும் மதகுகளையும், கண்மாய்களையும், அவற்றுக்கப்பால் சலசலத்து ஓடும் கால்வாய்களையும், ஏற்றக் கம்பங்களையும், மரகதப் பாயாக விரிந்து பரந்த விளைநிலங்களையும், கற்பனை செய்துகொண்டு யாரும் சிரமப்பட வேண்டாம். கூடுமானால், ஒரு பக்கம் செக்கச் சிவந்த வண்ணத்தோடு கண்ணைக் கவரும் விதமான தளதளப்புடனும், மறுபுறத்தே அழுகிச் சூம்பிப் புழுக்கள் நெளிந்து பார்க்கவே அருவருப்பை ஊட்டும் வகையாகவும் அமைந்த ஓர் ஆப்பிள்பழத்தை மனக்கண்ணில் உருவகப்படுத்திக் கொள்ளலாம்!

ஆம்; ஒரு காலத்தில் அங்கு பெரியதோர் ஏரி இருந்திருக்கலாம் என்ற ஊகத்தைத் தரும் அந்தத் தாழ்வான வட்டாரத்தின் மேலண்டைப் பக்கம் அழகழகான வீடுகளும், நவீன கட்டடக் கலையின் மேன்மையை விளம்பரப்படுத்துவதற்கென்றே உருவாக்கினாற்போன்ற எழில் மிகு பங்களாக்களும், நிழல்தரு மரங்கள் நிறைந்த விசாலமான தெருக்களும், விளையாட்டு மைதானமும் பொலிவுடன் காட்சி தந்தன; அதற்கப்பால் புதுப் புது வீடுகள் எழும்பிப் புதிதாக உருவாகி வரும் ஒரு நகர்; அதற்கும் மேலே கல்லூரியொன்றின் பல நிலைக் கட்டடத் தொகுதி; அதைச் சார்ந்து வடக்கு — தெற்காகச் செல்லும் ரயில் பாதைகள். கீழண்டைப் பக்கமோ நூற்றுக்கும் அதிகமான ஓலைக் குடிசைகள்; அவற்றின் வாசல்களையே போக்குவரத்து வழிகளாகக்கொண்ட இருண்ட சந்துக்கள். பள்ளப் பகுதிகளை மேடாக்குவதற்காக நகரசுத்தி இலாகா லாரிகளில் கொண்டு வந்து கொட்டும் குப்பைகளாலும், குடிசைகளுக்குச் சுவர்எழுப்ப அங்காங்கே மண் தோண்டப்பட்ட பள்ளங்களில் மழை நீர் தேங்கியிருப்பதாலும் அங்கு எப்போதும் ஒருவித துர்நாற்றம் வீசிக்கொண்டேயிருக்கும். இந்தப் பகுதிக்குச் சற்று அப்பால் மற்றொரு பகுதி. அதுவும் ஏறத்தாழ இதே போன்றதுதான். ஆனால் அங்கே மூப்பது நாற்பது ஓட்டு வீடுகளும், சில சிறிய மொட்டை மாடி வீடுகளும் தென்பட்டன. அவற்றின் அமைப்பிலிருந்து அந்தப் பகுதிதான் அங்கு பழைமையானது என்று எண்ணத் தோன்றும். அது உண்மைதான்.

இப்படி முற்றிலும் வேறுபட்ட இருநிலைகளைக் கொண்டு அமைந்த அவ்வட்டாரத்தில் சில வேடிக்கையான காட்சிகளையும் காணலாம். மாடிவீட்டுப் பெண்ணொருத்தி கம்பள விரிப்பில் அமர்ந்து கர்நாடக சங்கீதத்தைச்

பொள்ளாச்சி என். மாணிக்கம் செட்டியார் குமாரர் திரு ஆறுமுகத்துக்கும், திருச்சி திரு கே. சுப்பிரமணிய செட்டியார் குமாரத்தி சௌபாக்கியவதி பாலசரஸ்வதிக்கும் சமீபத்தில் திருச்சிராப்பள்ளியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்







பொள்ளாச்சி என். மாணிக்கம் செட்டியார் குமாரர் திரு நமசிவாயத்துக்கும், அம்பாத்துரை திரு எஸ்பி. ஏ. பழனியாண்டி செட்டியார் குமாரத்தி சௌபாக்கியவதி பர்வதத்துக்கும் திருச்சிராப்பள்ளியில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

சாதகம் பண்ணிக் கொண்டிருப்பாள்; அதே சமயம், பக்கத்திலுள்ள குடிசை வாசலில் உட்கார்ந்து ஹிந்தி, தமிழ் சினிமாப் பாட்டுக்களை 'பாஞ்சோ' எனப்படும் புல்புல் தாராவில் வெகு குஷியாக வாசித்துக் கொண்டிருப்பான் ஓர் இளைஞன். மொட்டை மாடியில் ஏதாவதொரு பொழுது போக்குச் சங்கத்தின் ஆண்டு விழாவுக்காக ஷேக்ஸ்பியர் நாடகம் 'ரிகர்சல்' நடந்து கொண்டிருக்கும்; கீழே குடிசைகளின் சந்து மூலையில், அங்காளம்மனுக்கு ஆடி மாசத்திலே கூழ் ஊற்றித் திருவிழா செய்யும்போது 'துரியோதனாதிகள் கர்வ பங்க'த்தைத் தெருக்கூத்தாக நடத்திக் காட்ட மேளதாளம் முதலானவற்றின் ஏக இரைச்சலோடு ஒத்திகை நடப்பதும் கேட்கும். பங்களா அறையொன்றில் பரத நாட்டியப் பயிற்சி நடந்துகொண்டிருக்கும்; அடுத்தாற்போல் உள்ள ஒரு குடிசையில் சீட்டுப் பணம் சம்பந்தமாக ஏற்பட்ட பூசல் அடிதடி சண்டையாக முற்றித் தெரு வரையில் வந்து அழுகையும் கூச்சலுமாக அமளி துமளிப்படும். மாடி வீட்டார் மதில் சுவர் ஓரமாக ஏதேதோ பஞ்சு பாண்டேஜ் துணிக் கந்தைகளை யெல்லாம் கொட்ட, அவை காற்றில் பறந்து வந்து குடிசை வாசலில் உள்ள குடி தண்ணீர்ப் பானைகளில் விழுந்து அங்கே குமுறலை ஏற்படுத்தும். குடிசைகள் பக்கமிருந்து முட்டை ஓடுகளையும் எலும்புத் துண்டுகளையும் காக்கைகள் கொத்திக் கொண்டு போய்ப் பங்களா வீட்டின் குளிக்கும் தொட்டியில் போட்டு முணுமுணுப்பை உண்டாக்கும். பங்களா வீட்டு நாய்கள் எலும்பு கிடைக்காத ஏக்கத்தில் குடிசைகளிலே புகுந்து சட்டிப் பானைகளை உருட்டிவிட்டுப் போவதும், குடிசைவாசிகளுக்குச் சொந்தமான ஆடு மாடு கோழிகள் பங்களாக்களில் நுழைந்து செடிகொடிகளை மேய்ந்து வாசல் வராந்தாக்களை அசுத்தப்படுத்தி விட்டுச் செல்வதும் அங்கு தினசரி நிகழும் நிகழ்ச்சிகள்.

இத்தகைய இருதுருவ சமூக அமைப்புக்களைக் கொண்டு ஒரு நவீன சோஷலிஸ பாணிக் கண்காட்சி சாலைபோல் விளங்கிய அந்த வட்டாரம் இப்போது இரவின் ஆழ்ந்த அமைதியில் மூழ்கிக் கிடந்தது. அவ்வமைதியைக் குலைக்கும் விதத்தில், நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையைவிட்டு இறங்கிச் 'சுதந்திர பார்க்'கின் ஓரமாகக் கொடிப் பாதையொன்றில் நடந்து, அங்கு குறுக்கிட்ட ஒரு சாக்கடைக் கால்வாயைத் தாண்டிக் குதித்து லேக் அவென்யூ சாலையில் ஏறிச் சற்றுதூரம் சென்றபின், புதிதாக வர்ணம் பூசப்பட்டிருந்த தபால் பெட்டியொன்றின் அருகில் நின்று சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தான் நச்சி என்னும் நச்சினார்க்கினியன். அவன் கையில் இருந்த சிகரெட்டை எறிந்து விட்டுக் கிழண்டைப் பக்கமிருந்த குடிசைகளை நோக்கி நடக்க முற்பட்டதுதான் தாமதம், எங்கெங்கிருந்தோ எழுந்து ஓடி வந்த ஏழெட்டு நாய்கள் பெருங் குரலெடுத்துக் குரைக்க ஆரம்பித்தன.

''அட, சே! பணப் பொட்டிக்குக் காவலாகப் பாலும் சோறும் ஊட்டி வளர்க்கிற பங்களா வீட்டு நாய்களெல்லாம் படுத்துத் தூங்கும்போது, இந்த அன்னாடங் காய்ச்சிப் பன்னாடை நாய்கள் என்னமோ பெரிய கெண்டு கெடாரத்தைத் திருட வந்தவனைப் பார்த்துட்டாப்பலே என்னமா கத்திக் கூச்சல் போடுதுங்க!'' என்று எரிச்சலுடன் முணுமுணுத்துக் கொண்டே இரண்டு கற்களை எடுத்துக் குருட்டாம் போக்கில் எறிந்தவாறு மேலே நடந்தான் நச்சி. ஆனாலும் அந்தச் சொறி நாய்கள் அவனை விடாமல் சுற்றிச் சுற்றி வந்து குரைத்துக் கொண்டுதான் இருந்தன.

காட்டுக்கு வேட்டையாடப் போன மன்னன் நகர் திரும்பித் தன் அரண்மனைக்குள் பிரவேசிக்கும்போது வாத்திய கோஷங்களோடு வரவேற்கப்படுவானுமே, அம்மாதிரி, அந்த நள்ளிரவு நேரத்தில் நாய்களின் பலத்த குரைப்பொலிகளைப் பின்னணியாகக் கொண்டு இராஜ நடை போட்டுக் குடிசைகளைக் கடந்து ஓட்டு வீடுகள் உள்ள ஒரு குறுகலான தெருவில் புகுந்த நச்சி, இடதுபக்கவாட்டில் தன் பார்வையைச் செலுத்தியவாறு மெல்ல நடக்கலானான்.

காரை உதிர்ந்து கலகலத்துப் பாழடைந்தாற்போல் காணப்பட்ட ஒரு வீட்டின் திண்ணைத் தாழ்வாரத்தில் 'உடற் பயிற்சிக் கூடம்' என்று எழுதித் தொங்கிய போர்டு ஒன்று தெரு விளக்கின் வெளிச்சத்தில் மங்கலாகத் தென்பட்டது. அந்த வீட்டுக்குப் பக்கத்திலிருப்பது ஒரு குயவன் வீடு என்று அதன் வாசலில் சட்டிப் பானைகளை அடுக்கிச் சூளை போட்டிருந்ததால் எழும்பிய புகை மூட்டத்திலிருந்து புலனாகியது. அதற்கப்பால் ஒரு குடிசை வீடு. அதன் எதிரே, லொக்கு லொக்கென இருமிக் கொண்டிருந்த கிழவனொருவன் அந்தத் தெருவையே 'லாட்ரினா'க்கிக் கொண்டிருந்தான். அதற்கு அடுத்து மற்றொரு சிறிய மச்சு வீடு. ஓடுகள் சரிந்து சுவர்கள் வெடிப்

புற்ற நிலையிலும் ஏதோ ஒரு சத்தியத் துக்காக நிற்பதுபோல் காணப்பட்ட அவ்வீட்டைச் சுற்றி வேலியும், புறக் கடையில் ஒரு மாட்டுக் கொட்டகை யும் இருப்பது தெரிந்தன.

அந்த வீட்டின் வேலிப்படலைத் தள்ளிக்கொண்டு உள்ளே சென்ற நச்சி, சாத்திக் கிடந்த வாசற் கதவைத் தட்டுவதற்காகக் கையெடுத்த அதே சமயம், ''வா, அண்ணா!'' என்ற இனிய மென்குரலோடு கதவு திறக்கப் பட்டது கண்டு சற்றே வியப்படைந்தவ னாய் நிமிர்ந்து பார்த்தான்.

இன்று பகல் மாநகராட்சி மன்றத் தில் உபாத்திமை வேலைக்கான விண் ணப்ப நமூனா வாங்குவதற்குப் பணம் இல்லாமல் திண்டாடிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு சபேசனிடம் ஒரு ரூபாய் கடனாகப் பெற்றுக்கொண்டு போனவளும், அதன்பின் மூர் அங்காடி பஸ் நிலையத்தில் நச்சியைக் கண்டு பயந்து அவசரம் அவசரமாகப் பஸ்ஸில் ஏறிச் சென்றவளுமான அந்த அழகிய இளம் பெண்தான், வாடித் துவண்ட முகமும் வறண்ட புன்னகையுமாகக் கையில் விளக்கேந்தி வந்து கதவைத் திறந்தாள்.

அவளை ஒரு கணம் பாசப் பரிவோடு ஏறிட்டு நோக்கிய நச்சி சட்டென்று முகத்தைத் திருப்பிக்கொண்டு சரேலென உள்ளே சென்றான்.

''அம்மா! அண்ணா வந்திருக்குது; எழுந்திரும்மா!'' என்றவாறு அடுப் படிக்கு ஓடினாள் அந்தப் பெண்.

அடுப்படி தட்டைச் சுவருக்கு அருகில் மணையைத் தலைக்கு அணை யாக வைத்துக் குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருந்த கன்னியம்மாள் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். நாற்பது வயதைக் கடந்த நிலையிலும் நல்ல தேக இடத் தோடு ஒரு முரட்டுத்தனமான முக அமைப்புடன் தோற்றமளித்த அவள் தன் மைந்தனைக் கண்டதும் மகிழ்ச்சி யடைந்தவளாய்க் கைகளை ஊன்றி எழுந்திருக்க முயன்றாள். பின் ஏதோ ஆத்திரமும் கோபமும் கொண்டவள் போல் சட்டென்று அப்படியே உட் கார்ந்து சுவர் பக்கமாகத் திரும்பிக் கொண்டு, ''இதுக்கு ஏண்டி பொண்ணே, இப்படி அலறிப் புடைச் சுக்கிட்டு ஓடியாந்து என்னை எழுப் பினே?'' என்று கடுகடுப்புடன் கூறிய வாறு மறுபடியும் முன்றானையை விரித் துப் போட்டுப் படுத்து விட்டாள்.

கையில் இருந்த பட்சணப் பொட்ட லத்தை மாடப்புரையில் வைத்து விட்டுத் திரும்பிய நச்சி இதொன்றை



''காலேஜெல்லாம் எப்பத் திறந்து பையன்களை உள்ளே விடுவான்னு தெரியல்லையே?''

''அட! நீங்க ஒண்ணு! ஜெயிலெல்லாம் எப்ப திறப்பா, பசங்களை வெளியே விடுவாங்கன்னு யோசனை பண்ணுங்க!''

யுமே கவனியாதவன்போல் முகம் கை கால் கழுவப் புறக்கடைக்குப் போனான்.

''ஊர் சுத்திப் பொறுக்கிப் பையன், ஊட்டுக்கு வர்ற நேரத்தைப் பாரு!'' என்று கோபத்துடன் மீண்டும் முணு முணுத்த தாயார்க்காரி புரண்டு படுத்தாள்.

''எழுந்திரும்மா, அண்ணா ரொம்பப் பசியோடு வந்திருக்கிறாற் போல இருக்குது'' என்று தலைமாட்டில் உட் கார்ந்து இரகசியக் குரலில் கூறி அவள் தோளைப் பிடித்து உலுக்கினாள் அந்தப் பெண்.

''இன்னாடி பொண்ணே, நீ வெள் ளாடறியா? இப்போ எதுக்கு என்னை எந்திருக்கச் சொல்றே?'' என்று தலை யைத் தூக்கிச் சீறினாள் கன்னியம்மாள்.

''அண்ணாவுக்கு ஏதாவது சாப்பிட எடுத்து வையம்மா!....''

''சீ போ, அந்தண்டை! அந்தக் கய்லாத்துப் பையன் ஊட்டு நிலவரம் தெரியாம ஊரைச் சுத்திப்பிட்டு வரான்னா, நீ வேறே வவ்வாச்சி மாதிரி சொல்ல வந்துட்டியே! இங்கே இன்னா இருக்குது எடுத்துக் கொட்டி வைக்க? ரெண்டு நாளா வவுத்திலே ஈரத் துணியைப் போட்டுக்கிட்டு இருந்ததை அதுக்குள்ளார மறந்துட் டியா? பாவம், வயசுப் பொண்ணு நம்மோடு கெடந்து பதங்குலையுதேன்னு மனசு பொறுக்காம, அந்த மோலியார் ஊட்டு அம்மாகிட்டே போய்ப் பால் ஊத்தற கணக்கிலே ஓர் ரூபா கடன் வாங்கியாந்து காப்படி அரிசி வாங்கி வடிக்கக் கொட்டினதாலே உனக்கும் இப்போ திமிர்ப் புடிக்கப் போச்

சாக்கும்!'' என்று நச்சியின் காதில் விழும்படியாக இரைந்து கூவினாள் கன்னியம்மாள்.

''ஏம்மா, நேரம் வேளை பார்க்காமல் கூச்சல் போட்டு ஊரை எழுப்பறே?'' என்று அவளது வாயைப் பொத்திய அந்தப் பெண், ''வந்ததும் வராததுமாக நீ இப்படி வாய்க்கு வந்தபடி திட்டுகிறதனாலேதான் அவர் வாரத்துக்கு ஒரு நாள்கூட வீட்டுப் பக்கம் தலைகாட்ட மாட்டேங்கிறார்'' என்றாள் பொய்க் கோபத்துடன்.

கன்னியம்மாளுக்கு அடங்காத ஆவேசம் வந்து விட்டது. விருட்டென்று எழுந்து உட்கார்ந்து அவளை விழித்துப் பார்த்தவாறு, ''ஆமா, இவள் அவனோடு ஒட்டிக்கிட்டுப் பொறந்தவள் பாரு; அவனைச் சொன்னதும் இவளுக்கு ரோசம் பொத்துக்கிட்டு வந்துடுச்சு! மரியாதையா இங்கிருந்து போயிடு. இல்லேன்னா எனக்குக் கெட்ட ஈசாமை வரும்!'' என்று கத்தினாள்.

அந்தப் பெண் இதைக் கேட்டு முகம் வெளுத்துச் சிறுத்துப் போனாள். ஏதோ ஓர் அவமானத்தைத் தாள மாட்டாதவள்போலக் கண் கலங்கிய அவள் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு போலியான புன்னகையுடன், ''எழுந்திருச்கப் போம்மா! எனக்கு நீ போட்ட சாப்பாட்டை அப்படியே மூடி வைச்சிருக்கிறேன்; அதை அண்ணாவுக்கு எடுத்து வை!'' என்றாள்.

கன்னியம்மாளின் கோபம் இப்போது போன இடம் தெரியவில்லை. வியப்பும் திகைப்புமாக அவளை வெறித்துப் பார்த்த அவள் தன்னைத் தானே நொந்து கொள்கிறவள்போல் பெருமூச்சு விட்டவாறு எழுந்து மாட்டுக் கொட்டகைப் பக்கம் போய் விட்டாள்.

''இன்னா, வேதா! இவ்வளவு நேரத்துக்கு நீ ஏன் தூங்காம கண் முழிச்சுக்கிட்டு இருந்தே?'' என்று கேட்டுக் கொண்டே முகத்தைத் துடைத்தபடி உள்ளே வந்தான் நச்சி. சற்றுமுன் அவனுடைய தாயார்க்காரி பொழிந்து கொட்டிய வசை மொழிகளை அவன் செவிகள் கொஞ்சமும் ஏற்றதாகத் தோன்றவில்லை.

அடுப்படிக்குப் போன அந்தப் பெண் ஓர் அலுமினியத் தட்டில் மூடி வைத்திருந்த வெறும் சோற்றில் உப்புப் போட்டுத் தண்ணீர் ஊற்றி இரண்டு மிளகாயைச் சுட்டு எடுத்துக் கொண்டு வந்து 'கூடத்து' அறையில் வைத்துவிட்டு நிமிர்ந்தாள். ''இன்று நீ நிச்சயமாக வீட்டுக்கு வருவாய் என்று எனக்குத் தெரியும், அண்ணா! அதனால் தான் தூங்காமல் படித்துக்கொண்டிருந்தேன்'' என்றாள் மெல்லச் சிரித்து.

''கதவைத் தட்டுகிறதுக்கு முன்னாடி வந்து திறந்தாயே, நான்தான்னு உனக்கு எப்படித் தெரியும்?''

''நாய்கள் குலைக்கிற சத்தம் கேட்டது; உன்னைத் தவிர வேறு யார் இந்த நேரத்தில் வருவார்கள்?''

ஒரு கோணல் சிரிப்புடன் தலையாட்டிக் கொண்ட நச்சி தட்டுக்கெதிரில் உட்கார்ந்து சாப்பிடலானான். நகரிலுள்ள பெரிய ஹோட்டல்களிலெல்லாம் புகுந்து, விலை உயர்ந்த உணவுப் பண்டங்களை உண்டு பழக்கப்பட்டிருந்த அவன், இந்த வெறும் பழஞ்சோற்றை அத்தனை ஆவலோடு ரசித்துச் சுவைத்துச் சாப்பிடுவதைக் காண விந்தையாகவே இருந்தது.

''நீ சாப்பிட்டியா, வேதா?''

''ஊம்......''

''எல்லாம் நான் கேட்டுக்கிட்டுத் தான் இருந்தேன்'' என்று கரகரத்த குரலில் கூறிய நச்சி, மாடப்புரையில் வைத்திருந்த பொட்டலத்தை எடுத்து அவளுக்கு எதிரே தள்ளி விட்டு, ''இதைப் பிரிச்சுத் துன்னு. உனக்காகத்தான் வாங்கியாந்தேன்'' என்றான் அலட்சியமாக. அந்த அலட்சியத்தில்தான் எத்தனை அன்பு! எத்தனை கனிவு!

மாட்டுக்கு வைக்கோல் பிரித்துப் போட்டுக் கொண்டிருந்த கன்னியம்மாள் இரைவாணத்துப் பக்கமாகத் தலையை விட்டு, ''ஏ, வேதம்மா! உறியிலே ஆயாக்குப் பாலு பொறை குத்தி வைச்சிருக்கிறேன்; அதை எடுத்து ஊத்து! வெறுந் தண்ணிச் சோத்தை எப்படித் துன்னுவான்?'' என்று அவளும் ஒருவித அலட்சிய எரிச்சலுடன் குரல் கொடுத்தாள். உண்மையில் அது எரிச்சல்தானா?

தனக்குள் மெல்லச் சிரித்துக்கொண்ட வேதா எழுந்து போய் உறியிலிருந்த தயிரை எடுத்து வந்து நச்சியின் தட்டில் ஊற்றிவிட்டு, பொட்டலத்தைப் பிரித்துப் பாதியைக் கன்னியம்மாளுக்கு வைத்துவிட்டு, ஒரு சிறு பிள்ளைக்குரிய ஆவலுடன் உண்ண ஆரம்பித்தாள்.

அவன் உண்டு முடிக்கும் வரையில் மௌனமாயிருந்த நச்சி சட்டென்று நிமிர்ந்து, ''அது சரி; இன்னைக்கு உன்னை மோர் மார்க்கெட்டண்டைப் பார்த்தேனே, அங்கே ஏன் போனே? யாரைக் கேட்டுக்கிட்டுப் போனே?'' என்று முரட்டுத்தனமாகத் தட்டைத் தள்ளி விட்டுக் கோபமாக அதட்டிக் கேட்டான். (தொடரும்)

## விவாகம்

இந்தியன் பாங்க் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணமாச்சாரியார் குமாரத்தி சௌ. மாலதிக்கும், வேலூர் மிராஸ்தார் ஸ்ரீ லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார் குமாரர் சிரஞ்சீவி வெங்கடவரதனுக்கும் சமீபத்தில் திருச்சானூரில் விவாகமும், அதை யொட்டி மயிலாப்பூர் எத்திராஜ் கல்யாண மண்டபத்தில் வரவேற்பும் மிக விமரிசையாக நடைபெற்றன.

வாழ்க மணமக்கள்!






பதினெட்டாம் அத்தியாயம்

## தலைவியே தோழியானல்

ஒற்றர்களின் உதவியோடு காவலர்களால் சிறைப்பிடிக்கப்பட்ட கயல்விழி, வீரநரசிம்மனுக்கு அருகில் விழுப்பரையரைக் கண்டவுடன் அச்சம் நீங்கி அமைதியோடு நின்ருள். அவள் தந்தை ஆதிச்ச தேவருக்குத்தான் உச்சி முதல் உள்ளங்கால் வரையில் நடுக்கம் எடுத்தது. விழுப்பரையரிடம் அவர் ஓலமிடத் தொடங்கினர்.

''புலவர் அவர்களே! இவளை இங்கு வரவேண்டாமென்று தாங்களும் தடுத்தீர்கள்; நானும் தடுத்தேன். பெரியவர்களின் சொல் கேட்காத பெண்ணுக்கு இரங்கியதால் இப்போது வினை வந்து விட்டது. பார்த்தீர்களா?'' என்று பதற்றத்துடன் கூறினர்.

விழுப்பரையர் வீரநரசிம்மனின் அருகில் சென்ருர்; ''சக்கரவர்த்திகளே! என்னோடு வந்தவர்கள் ஒற்றர்களென்ருல் அவர்களுடைய தலைவன் நான். ஆகவே தலைமை ஒற்றனுகிய என்னையும், தயவுசெய்து அவர்களுடன் சிறையில் அடைக்கச் செய்யுங்கள்!'' என்று மீண்டும் வேண்டிக் கொண்டார்.

''இவர்கள் இருவரும் முன்பு இங்கு உளவறிய வந்தவர்கள். சக்கரவர்த்திகளின் கட்டளைப்படியே நாங்கள் சிறை செய்திருக்கிருேம்'' என்ருன் காவலர் தலைவன்.

''சுந்தர பாண்டியர் முன்பு ஒருவனை ஒற்றுட வந்திருக்கலாம். இவர்களும் அவரோடு ஒன்ருக வந்திருக்கலாம். ஆனல் அவர்தான் இளைய பாண்டியர் என்பது இவர்களுக்கு எங்ஙனம் தெரியும்? கூடுவிட்டுக் கூடு பாயும் சித்தரைப் போல் உலவிய அவர், தம் சொந்தச் சகோதரரான பாண்டியரிடமே தாம் உயிருடன் இருப்பதைக் கூறவில்லையே!''

வீரநரசிம்மருக்கும் இந்தச் செய்தி முன்பே எட்டியிருந்தது. 'இளைஞன் வீரன் மட்டிலுமல்ல; தந்திரசாலிபோல் இருக்கிறதே!' என்று தமக்குள் வியந்து கொண்டார்.

''சக்கரவர்த்திகளே! இந்தப் பேதைப் பெண் நான் வந்த காரணத்தை அறியாமல் தங்கள் குமாரத்தியைக் காண வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தாள். இளவரசியார் அவர்களுக்கும் இவளுக்கும் பழக்கம் உண்டாம். இவள் ஆடற்கலையில் பித்துக் கொண்டவள். இளவரசியாருக்கும் அதில் பற்றுதல் உண்டு என்ருள். நான் எவ்வளவோ தடுத்துப் பார்த்தேன். அரச குலத்தாரோடு பழகுவதிலுள்ள அபாயங்களைப் பற்றி எச்சரிக்கை செய்தேன். காஞ்சி நகருக்குள் வந்தவுடனேயே ஆபத்து வந்து விட்டது. அவளுக்கு மட்டும் ஆபத்து வரவில்லை. நான் வந்த நோக்கமே இவளால் சீர்குலைந்து விடும் போலிருக்கிறது.''

''என்னல் தங்களுக்கும் ஆபத்து வர வேண்டாம்; இந்த நாட்டுக்கும் ஆபத்து வர வேண்டாம். நாங்கள் சிறைக்குப் போகிருேம். சக்கரவர்த்திகள் இளவரசியாரை அரை நாழிகைப் பொழுது சிறைக்கு அனுப்பி வைத்தால் போதும். அவர்களைப் பார்க்க வேண்டுமென்கிற என் ஆவல் நிறைவேறினல், பிறகு தண்டனையைப் பொறுமையோடு ஏற்றுக்கொள்ளுகிறேன். சக்கரவர்த்திகளே, தயைசெய்து அவர்களைக் கண்டு மகிழும் பாக்கியத்தை மட்டும் எனக்கு மறுக்காதீர்கள்.''

வீரநரசிம்மனின் நெற்றி சுருங்கியது.

''நாங்கள் அனைவருமே நட்பை நாடி வந்திருக்கிருேம். பிறகு தங்கள் சித்தம்'' என்று கூறிவிட்டு, ''எங்கள் இளவரசரின் மனம் பகைமையில் திரும்பி விடக் கூடாதென்பதற்காகவே நான் இங்கு ஓடோடியும் வந்தேன். வடக்கில் உள்ள தங்கள் பகைவர்கள் அவருடைய ஆற்றலை அறிந்து கொண்டு எப்படியோ அதற்குள் தூதுவர்களை அனுப்பி விட்டார்கள்'' என்ருர்.

விழுப்பரையரின் இந்த ராஜதந்திர யோசனை வீரநரசிம்மனிடம் பலிக்கத் தொடங்கியது. வடக்கில் தெலுங்குச் சோழர்கள், காகதீயர்கள் முதலானோர் கோசலர்களின் ஆதிக்கத்துக்கு எதிராகத் திட்டங்கள் வகுத்துக் கொண்டிருந்தார்கள். — 'அவர்கள் அதற்குள் தெற்கே பாண்டியர்களிடம் தங்களுக்கு நட்பைத் தேடுகிறார்களா?'

காவலர்களை நோக்கி, "இந்தப் பெண்ணை அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்று இளவரசியாரிடம் விட்டு விடு: இவள் தந்தையும் நம் விருந்தினராகவே தங்கியிருக்கட்டும்" என்றார் வீர நரசிம்மன்.

விழுப்பரையர் நன்றி கூறினார். கயல்விழியும் ஆதிச்சதேவரும் இருவரையும் வணங்கி விடை பெற்றுக்கொண்டு காவலர்களோடு திரும்பினார்கள்.

அந்தப்புரத்தின் விருந்தினர் அறையில் கயல்விழி தனித்திருக்க, செய்தி கேட்டுப் பாமினி ஆவலோடும் தயக்கத்தோடும் அங்கு வந்து சேர்ந்தாள். காண வேண்டும் என்ற ஆவலின் பரபரப்பு ஒருபுறம் இருந்தாலும் கயல்விழியிடம் ஏனோ அவளுக்குச் சந்தேகமும் ஏற்பட்டிருந்தது. முன்பு அவர்கள் அங்கு வந்து சென்றபிறகு நடந்த நிகழ்ச்சிகள் அவளுக்கு அச்சத்தை ஊட்டியிருந்தன. புலவனாகவும் பாண



ளாகவும் வந்தவன் சுந்தரபாண்டியன் தான் என்று அறிந்தவுடனேயே அவள் தன்னையும் மீறிய பரவசத்தில் ஒருகணம் ஆழ்ந்து விட்டாள். மறுகணமே அவன் தங்களது குலப் பகைவன் என்ற உணர்வும் வந்து விட்டது. அவன் பகைவன் என்பதற்காக மட்டிலும் பாமினி அவனை வெறுக்க வில்லை; தன்னுடைய தூய்மையான அன்பையும் இராஜ தந்திரத்துக்காகப் பயன் படுத்திக் கொண்டானே என்ற ஆத்திரம் அவளுக்கு. தனக்கு அவன் மீது இருந்த ஆத்திரத்தை யெல்லாம் கயல் விழியிடம் கொட்டித் தீர்க்க வேண்டும் என்ற துடிப்புடன் பாமினி அங்கு வந்து சேர்ந்தாள்

''இளவரசியாரே!'' என்று துள்ளிக் குதித்து வந்து பாமினியை அன்போடு தழுவிக் கொண்டாள் கயல்விழி.

''உன்னுடைய இளவரசர் இப்படியும் ஒரு கூத்து நடத்தச் சொல்லி உனக்குக் கற்றுத் தந்திருக்கிறார் போலும்!'' என்று சீறினாள் பாமினி; ''இனியும் இந்த மாளிகையைக் கூத்தரங்கு ஆக்க வேண்டாம்; சிறிது எச்சரிக்கையுடன் தொலைவிலிருந்து பழகுவதே நம் இருவருக்கும் நல்லது.''

அம்புபட்ட அன்னப் பறவையெனச் சொல்லம்பு பட்டுத் துடி துடித்தாள் கயல்விழி.

''இளவரசியாரே! பெரியவர்கள் சொல்லை மீறி இங்கு வந்த எனக்கு இதுவும் வேண்டும்; இதற்கு மேலும் வேண்டும். தங்கள் தந்தையார் அவர்களோ என்னைச் சிறை செய்யும்படி கட்டளையிட்டார்கள். அவர்களையாவது நான் முன்பு நேரில் கண்டதில்லை. ஆகவே அவர்களுடைய தண்டனையே எனக்கு இப்போது தங்களது வர வேற்பைவிட உயர்ந்ததாகத் தோன்றுகிறது. ஒன்று அவர்கள் எண்ணப்படி என்னைச் சிறைக்கு அனுப்புங்கள்; இல்லையேல் இப்போதே எனக்கு விடை கொடுத்து விடுங்கள். நான் மதுரைக்குத் திரும்பச் செல்லுகிறேன். அரச குலத்தவர் என்பது தெரியாமல் நான் பாண்டியரிடம் பழகி விட்டேன். அது தெரிந்தே தங்களிடமும் பழகத் துணிந்தேன். இருபுறத்திலும் எனக்குத் துன்பந்தான் ஏற்படுகிறது. நான் சென்று வருகிறேன், இளவரசி!''

திரும்பிச் சென்றவளின் கரத்தைப் பற்றிக் கொண்டு ஆறுதல் கூறினாள் பாமினி. தன்னை அவர்கள் ஏமாற்றி விட்டதால் தன் கோபத்தை அடக்க முடியவில்லை என்றாள். அவளுக்கும் பல விஷயங்கள் சுந்தரபாண்டியனைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டி யிருந்ததால், கயல்விழியை அவள் விட்டு விடத் துணியவில்லை.

''அவர்கள் தங்களை மட்டுமா ஏமாற்றினார்கள்? என்னையுந்தான் ஏமாற்றி விட்டார்கள்!'' என்று, அவன் சுந்தரபாண்டியன் என்பது தனக்கே தெரியாமல் இருந்தது என் பதை அவள் மனத்தில் நயமாகப் பதிய வைத்தாள் கயல்விழி.

''பிறகு அவர் ஒற்றுட இங்கு வர வில்லை என்று நம்பச் சொல்கிறாயா?''

''நான் எதற்குத் தங்களை நம்பச் சொல்ல வேண்டும்? அவர்கள் ஒற்றுடத்தான் வந்திருப்பார்கள் என்று நானே நம்புகிறேனே!''

திடுக்கிட்டு, ''என்ன?'' என்றாள் பாமினி.

''ஆமாம், அவர்கள் என்னையும்கூட ஒற்றுடத் தூண்டியிருக்கிறார்கள் என்பது இப்போதுதான் புலப்படுகிறது!''

''கயல்விழி!'' என்று அதட்டினாள் பாமினி.

''இளவரசியாரே! முழுதும் கேட்டு விட்டு என் மீது கோபித்துக் கொள்ளுங்கள்'' என்றாள் கயல்விழி; ''இளவரசர் தங்கள் சாம்ராஜ்யத்து இரகசியங்களை அறிந்து கொள்ள விரும்பியிருந்தால் அவர்களுக்கு எத்தனையோ ஒற்றர்கள் இருந்திருப்பார்கள். அதற்கு அவர்களே நேரில் வர வேண்டும் என்பதில்லை. ஒரு பெண்ணின் துணையும் அவர்களுக்கு அவசியமில்லை. அவர்கள் கோசல சாம்ராஜ்யத்தை விட மிக உயர்வாக மதிக்கும் ஒரு சாம்ராஜ்யத்தின் இரகசியங்களைத் தேடித்தான் இங்கு வந்திருக்கிறார்கள். அந்தச் சாம்ராஜ்யம் இளவரசியாரிடமே இருக்கிறது. தங்களது உள்ளமாகிய அழகிய சாம்ராஜ்யத்தின் மீது அன்பு கொண்டுதான் அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள். தங்களையும் என்னையுமே சேர்த்து ஏமாற்றியிருக்கிறார்கள்.''

இப்படிக் கூறி விட்டுத் தனக்குள்ளாகவே சமாதானமும் கூறிக் கொண்டாள் கயல்விழி. 'நல்ல செயலுக்காகப் பொய் கூறினால் அதுவும் வாய்மையே என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். வள்ளுவர் கூறியதை அவர் தாம் எனக்கும் எடுத்துச் சொல்லியிருக்கிறார். ஆகவே என் தூது வெற்றி பெற வேண்டும்!'

பாமினியின் முகம் செந்தாமரையாக மலர்ந்தது.

''பிறகு?''

''பிறகு என்ன? எதற்காக அவர் தங்களிடம் என்னைப் பழகும்படி தூண்டு

ரோ? நாங்கள் எந்தெந்தக் கலைகளில் தேர்ச்சி பெற்றவர்கள், இன்மொழியில் பேசுகிறீர்களா, அன்புடன் நடந்து கொள்கிறீர்களா, பொறுமை என்னும் அணிகலம் பூண்டிருக்கிறீர்களா, தங் கணவருடைய ஆணை விதித்திராங்கள் என்ன, பாண்டியர் குலத்திடம் இயல்பாகவே வெறுப்புக் கொண்டிருக்கிறீர்களா — இவ்வளவு விஷயங்களையும் என்னை ஒற்றறிந்து வரச் செய்தார்! நானும் எதற்கென்று தெரியாமலே அவர் கட்டளைப்படி நடந்து கொண்டேன்.''

''உன்னிடம் பண்பில்லாமல் நடந்து கொண்டதற்கு என்னை மன்னித்து விடு, கயல்விழி!'' என்று கூவிக் கொண்டே வந்து அவள் கழுத்தை வளைத்துக்கொண்டாள் பாமினி!

''நாமெல்லாம் என்ன இருந்தாலும் பேதைகள்; தவறுகள் செய்கிறோம். தங்கள் மீது துளியும் எனக்குக் கோப மில்லை!'' என்றாள் கயல்விழி.

''அவரிடம் என்னைப் பற்றி நீ என்ன கூறினாய் ?''

''எப்படி முன்பு சோழமாதேவி என்ற ஓர் உத்தமி கோசல சாம்ராஜ்யத்தையும் சோழ சாம்ராஜ்யத்தை யும் ஒன்றாக இணைக்கப் பிறந்தாரோ, அதே போல் நம் இரு நாடுகளையும் இணைக்கப் பிறந்த திருமகள் இவர் என்று நான் சொல்லியிருப்பேன். அவர்தாம் சுந்தரபாண்டியர் என்று தெரியாததால் நான் அப்போது அதைக் கூறவில்லை. தங்களைப் போன்ற ஒரு பெண்மணியோடு பழகும் வாய்ப் பைத் தந்ததற்காக அவருக்கு நான் நன்றி கூறுவேன். தங்களது அழகும் அன்பும் என்னையே கவர்ந்து இங்கு அழைத்து வந்து விட்டனவே, அவர் அவற்றில் மயங்கியதில் என்ன வியப்பு இருக்கிறது ?''

''நீ என் உயிர்த் தோழியாகி விட்டாய், கயல்விழி!''

பாமினி கயல்விழியைத் தழுவிக் கொண்டபோது கயல்விழியின் கண்கள் ஊற்றுப் பெருக்கெடுத்தன. வழிந்தோடும் இரத்தக் கண்ணீரைப் பாமினி ஆனந்தத்தின் வெள்ளமென நினைத்துக் கொண்டாள். கண்ணீ ருக்கு நிறம் ஏது அதை உதிர்ப்போரைக் காட்டிக் கொடுப்பதற்கு?

### பத்தொன்பதாம் அத்தியாயம்

# வெஞ்சினம் வென்றது

**வீ**ரநரசிம்மன் பாண்டிய நாட்டின் உரிமையை மதித்து அதை அங்கீ காரம் செய்வதா அல்லது அதன்மீது போர் தொடுத்து முன் போலவே சோழருக்கு அடங்கி வாழச் 'செய் வதா என்று இன்னும் முடிவு செய்ய வில்லை. விழுப்பரையருக்கு முன் பாகவே சயங்கொண்ட சோழ வல்லபர் அங்கு வந்து சுந்தரபாண்டியன் மீது பெரும் பகையை அவர் உள்ளத்தில் மூட்டி விட்டிருந்தார். விழுப்பரை யரோ பாண்டியரின் ஓலையோடு நட்புக் காக வந்திருக்கிறார். அவர் இரண்டை யும் சீர்தூக்கிப் பார்க்க முனைந்தார்.

கோசல நாட்டுப் படைத் தலைவர் களான தண்டினகோபன், ஜகதொப்ப கண்டன், அப்பண தண்ணுக்கன் முதலியோரை அழைத்து அவர் அந்த ரங்கமாக ஆலோசனை நடத்தினார்.

''சோழ சாம்ராஜ்யத்தின் தோல்வி நம்முடைய தோல்விக்கு ஒப்பாகும். நாம் 'சோழர் குலக் காப்பாளர்கள்' என்று பெயர் பெற்றிருக்கிறோம். பாண்டியருடன் உறவு கொள்வது நம்முடைய வலிமைக்கு இழுக்காகும்'' என்றார் தண்டினகோபன்.

''சோழர் குலத்து இராஜ ராஜன் ஆண்மையும் வீரமும் உள்ளவனாக இருந்தால் ஓரளவாவது தன்னைக் தானே காப்பாற்றிக் கொள்ள முனைந் திருப்பான். தன்னைக் காப்பாற்ற முடிந்தவனுக்கே நாமும் உதவி செய்ய முடியும். இல்லா விட்டால் கோழைக்கு உதவுவதால் நமது வலிமையும் குன்றி விடும். அதனால்தான் நான் யோசிக் கிறேன்'' என்றார் வீரநரசிம்மர்.

''ஏன்? பாண்டிய நாட்டை முறி யடித்து நேரடியாக நம் சாம்ராஜ்யத் தின் கீழ் கொண்டு வந்து விடலாமே?'' என்றார் ஜகதொப்பகண்டன்.

''சுந்தரபாண்டியன் நேரடியாக நம் மைத் தாக்க வில்லை. உறையூரையும் தஞ்சையையும் அழித்தவன், அருகி லிருந்த நம்முடைய கண்ணனூர்க் கோட்டையை விட்டு விட்டான். நம்முடைய படைகள் அங்கே இல்லை என்பது தெரிந்தும்கூட அவன் அந்தக் கைப்பற்ற வில்லை. அவன் வீரனாகவும் இராஜ தந்திரியாகவும் இருக்கிறான். வீரர்களைவிட இராஜதந்திரிகளிடமே நாம் விழிப்போடிருக்க வேண்டும்.''



சென்னை, ஜே. வால்டர் தாம்ஸன் கம்பெனியைச் சேர்ந்த திரு ஜி. கே. சேஷாத்ரி (காலஞ்சென்ற திரு ஜி. வி. கிருஷ்ண அய்யர் அவர்களின் குமாரர்) அவர்கட்கும், ஜாம்ஷெட்பூர் திரு வி. வி. எஸ். சர்மா அவர்கள் குமாரத்தி திருமதி வி.எஸ். அலமேலுவுக்கும், பாலக்காட்டின் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

"அவனை வளர விடுவதோ அவனோடு நட்புக் கொள்வதோ நமக்கு ஆபத்தென்று சோழவல்லபர் கூறினாரே!"

"ஆமாம்; அவருடைய அதிகாரத்தின் கீழ்தான் அவன் வளர்ந்திருக்கிறான்!" என்று கூறி நகைத்தார் வீர நரசிம்மன்.

"சக்கரவர்த்திகளின் சித்தம் எதுவோ அதன்படி நடக்கிறோம்" என்றார் தண்டினகோபன்.

வீர நரசிம்மனுக்குச் சுந்தரபாண்டியனின் திறமையை மெச்சும் அளவுக்குப் பண்பிருந்தாலும் அவர் கோசல சாம்ராஜ்யத்து மாபெரும் தூணன வல்லாள தேவரின் குமாரர்; பரம்பரைச் செருக்கு மிக்கவர். திடீரென்று முளைத்தெழுந்த இளைஞனுக்குள்ள வீரத்துக்கும் விவேகத்துக்கும் தம்முடையது சிறிதும் குறைந்ததல்ல என்பதை அவனுக்கு வலியுறுத்த விரும்பினார்.

"தூது வந்திருப்பவரிடம் நான் நட்புறவுபற்றிப் பேசிச் சில நாட்கள் கடத்துகிறேன். அதற்குள் நம்முடைய படையில் பாதிப் பகுதியை உறையூருக்கு அடுத்துள்ள கண்ணனூர்க் கோட்டைக்கு அனுப்பி விடுங்கள். அவசியம் நேர்ந்தால் நானே நேரில் வந்து படை நடத்துகிறேன்."

படைத் தலைவர்களுக்கு எல்லையற்ற பூரிப்பு. உடனடியாக அவ்வாறே செய்வதாக வாக்களித்தார் பெரும் படைத் தலைவர் தண்டினகோபன்.

வீரநரசிம்மன் தமது அந்தப்புரத்தில் நடக்கும் செய்திகளைப் பற்றி அரசியாரிடம் மெல்ல விசாரித்தார். இளவரசி பாமினியின் மனம் எங்கே போய்க் கொண்டிருந்தது என்பது அவருக்குத் தெரியாமலில்லை. கயல்விழியின் வாயிலாக ஏதும் செய்தி கிடைத்ததா என்பதில் அவர் கவனம் செலுத்தினார்.

"சக்கரவர்த்திகளுக்குச் செய்தி தெரியுமோ?" என்று ஆவலோடு கேட்டுவிட்டு, தாமே அதைக் கூறினார் அரசியார்; "அந்தச் சுந்தர பாண்டியன் முன்பு தாங்கள் இங்கு இல்லாத போது பாணனாக வந்தது, நம்முடைய குமாரத்தியைச் சந்திப்பதற்குத்தானாம்! கங்காபுரியில் இருவருக்கும் பரிச்சயம் ஏற்பட்டிருக்கும்போல் இருக்கிறது. அவனால் பாமினியை மறக்க முடியவில்லையாம்."

"அவனால் மறக்க முடியவில்லையா? அல்லது நமது குமாரத்தியால் அவனை மறக்க முடியவில்லையா? என் செவிகளுக்கு ஏதும் எட்டியதாகவே நீ காண்பித்துக் கொள்ள வேண்டாம். புலவரை

# குறுக்கு வழி

குட்டிக் கதை



விந்தன்

நீண்ட நாட்களாகத் தம்முடைய வாக்காலும் வாழ்வாலும் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்த ஞானி ஒருவர் தலைவிரி கோலமாகத் தம் வழியே சென்று கொண்டிருந்தார்; அவர் அழைக்காமலே அவரைத் தொடர்ந்து ஒரு கூட்டம் சென்று கொண்டிருந்தது.

"எப்போது பார்த்தாலும் இவருக்கு மட்டும் இப்படி ஒரு கூட்டமா!" என்று பொறாமை கொண்ட ஓர் அஞ்ஞானி, அதற்குக் காரணம் அவருடைய தலைவிரி கோலம்தான் என்று எண்ணி, "இதோ பார், எனக்கும் நான் ஒரு கூட்டத்தைச் சேர்த்துக் கொள்கிறேன்!" என்று வாரியிருந்த தலையைக் கலைத்துக் கொண்டு, போட்டிருந்த சட்டையைக் கிழித்துக்கொண்டு, "ஆய், ஊய்!" என்று கத்தினான்.

அவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை; அவனைச் சுற்றி உடனே ஒரு கூட்டம் சேர்ந்தது.

ஆனால் என்ன ஏமாற்றம்? அடுத்த கணமே, "பூ, இவன் ஒரு பைத்தியக்காரன்டா!" என்று சொல்லிக் கொண்டே அந்தக் கூட்டம் கலைந்தது.

எனக்குத் தூதாகவும் விறலியை நம் குமாரத்திக்குத் தூதாகவும் அனுப்பி, நம்மை அவன் வலைக்குள் வீழ்த்தப் பார்க்கிறான் போலிருக்கிறது. கண்டெலி பின்னும் வலைக்குள் சிங்கத்தை வீழ்த்திவிட முடியாது.''

''பாமினி இவ்வளவு குதூகலமாக இருந்து நான் பார்த்ததே இல்லை!'' என்றார் அரசியார்.

''நம்மைத் தோல்வியுறச் செய்தவன் அவன். அவன் நம்மை வெற்றி கொண்டதற்காக அவள் தன்னை அவனுக்குப் பரிசளிக்கச் சொல்கிறாளா?''— இப்படி அவர் கேட்டபோது அவர் குரலில் கடுமை ஒலித்தது.

அரசியார் அதிர்ச்சியுற்றார்.

''கோசல சாம்ராஜ்யத்தின் இளவரசி என்னும் நினைவு பாமினியின் நினைவில் எப்போதும் இருக்க வேண்டும் என்று சொல். சாம்ராஜ்யத்தின் நன்மை தீமைகளை வைத்துத்தான் நாம் எதையுமே முடிவு செய்ய வேண்டுமே தவிர, என் குமாரத்தி என்பதற்காக நான் எதையும் அனுமதிக்க முடியாது. சோழ சாம்ராஜ்யம் நம்முடைய வலது கரமாக விளங்கியது. அதையே அவன் ஒடித்து விட்டு, நம்மிடமும் உறவாடத் துணிந்திருக்கிறான்!''

''குலோத்துங்கர் உயிருடன் இருந்தபோது அவர் எப்படியாவது தமது குமாரனுக்கே இவளை மணம் செய்து வைக்க முயற்சி செய்தார். அதுவும் தான் நடைபெறவில்லை. சாம்ராஜ்யத்துச் சக்கரவர்த்திகளாகிய தங்களுக்குக் காலமெல்லாம் போர்க்களங்கள் இருக்கின்றன. சாம்ராஜ்யத்தில் பிறந்ததற்காகவும் புகுந்ததற்காகவும் பெண்கள் தங்கள் வாழ்வையே துறந்துவிட வேண்டும் போலும்!''

சுருக்கென்று தைத்தது வீரநரசிம்மனுக்கு. வாழ்க்கையின் பெரும் பகுதியைக் களங்களில் கழித்தவர் அவர்.

''தங்களது குமாரத்தி பாமினிக்கு ஏற்ற இளவரசன் எங்கே இருக்கிறான் என்றே தெரியவில்லை. வடக்கிலும் எல்லோரும் பகை அரசர்கள். தெற்கில் உள்ளவனும் பகைவன்....''

அன்றைக்கு இரவில் வீரநரசிம்மனால் அமைதியோடு உறங்க முடியவில்லை. வெற்றி மேல் வெற்றிகளை அவர் தொடர்ந்து பெற்றார் என்றாலும் அவரிடம் நட்புறவு கொண்டவர்கள் மிக மிகக் குறைவு. நட்பை நாடித் துணிந்து முதன் முதலில் ஆள் அனுப்பியவர்களே பாண்டியர்கள்தாம்.

மறுநாள் பாமினியிடம் தனித்துப் பேச வேண்டும் என்ற முடிவோடு சிறிது நேரம் கண்களை மூடி எழுந்தார் வீரநரசிம்மன். மறுநாள் பொழுதோ நேருக்கு மாறாக விடிந்தது. சிறிதும் அவர் எதிர்பாராத செய்திகளைச் சுமந்து கொண்டு வந்தார்கள் சோழ நாட்டுத் தூதுவர்கள்.

''சக்கரவர்த்திகளே! சுந்தரபாண்டியன் மீண்டும் படைகளை அனுப்பிக் கங்காபுரியைக் கைப்பற்றி விட்டான். எங்களுடைய சக்கரவர்த்திகள் சுற்றம் சூழலோடு தங்களிடம் அடைக்கலம் புகுவதற்குப் புறப்பட்டு வந்தார்கள். அப்படித் தப்பி வந்தவர்களைப் பாண்டியனின் நண்பன் கோப்பெருஞ்சிங்கன் வழிமறித்துக் கொண்டான். திருமுனைப்பாடி நாட்டுச் சேந்தமங்கலம் கோட்டைக்குள் இப்போது சக்கரவர்த்தி சிறைப்பட்டிருக்கிறார். பாண்டியனும் காடவராயனும் ஒன்றாகி விட்டார்கள். தங்களைத் தவிரச் சோழ நாட்டுக்கு வேறு கதியில்லை.''

''சயங்கொண்ட சோழவல்லவர்?''

''அவரையும் பாண்டியனின் ஆட்கள் சிறைப் பிடித்துவிட்டார்கள். சோழ நாடு திறை செலுத்தாமல் இருந்ததற்கு அவரே காரணமாம்!''

உடனடியாகப் படைத் தலைவர்களை அழைத்து வரும்படி கட்டளையிட்டார் வீரநரசிம்மன்.

''காஞ்சியி லிருக்கும் படைகளை அழைத்துக் கொண்டு திருமுனைப்பாடி நாட்டுக்குச் செல்லுங்கள். பாண்டியனின் நண்பனான கோப்பெருஞ்சிங்கனிடம் நம்முடைய வலிமை முழுவதையும் காட்டுங்கள். உங்களுடைய படைகள் புகுந்த இடமெல்லாம் ஊழிக் காலத்துக் கடல் புகுந்த இடம் போல் மாற வேண்டும். சோழனைப் பாண்டியன் பழி வாங்கிறானல்லவா? இப்போது கோப்பெருஞ்சிங்கனும் அவனைச் சிறையில் அடைத்திருக்கிறானல்லவா? அவனை நீங்கள் பழி வாங்குங்கள்! அவனுடைய நாட்டைச் சுடுகாடாக்குங்கள்!''

''தாங்கள்?'' என்று தயக்கத்தோடு கேட்டார் தண்டினகோபன்.

''முன்னமேயே நம்முடைய படை கண்ணனூருக்குப் புறப்பட்டு விட்டதல்லவா? அந்தப் படையைக் கொண்டு நான் பாண்டிய நாட்டுக்குள் போகிறேன்! பாண்டியநாட்டுக்கு முடிவு கட்டுகிறேன்!''

மாளிகையின் உட்புறத்துக்கு அவர் திரும்பியவுடன் ஓடி வந்து அவர் பாதங்களில் வீழ்ந்தாள் பாமினி. அவர் அவளைத் தாண்டிக் கொண்டு மேலே சென்றார்.

(தொடரும்)


Exide









# உங்கள் கேசம் உதிருகிறதா?

இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



பொடுகு

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.





கேசம் உதிருதல்

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

இளமையில் வழுக்கை இக்கிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹேயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்விஸ் தபால் பை 10022, பம்பாய்-1

## ப்யூர் சில்விக்ரீன்



கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

## சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்

உங்கள் கேசத்தை காலை முதல் இரவு வரை நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலக்கப்பட்டுள்ளது.



# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/I/P/6/63

# சிரிக்கவும் சிந்திக்கவும்



கணக்குப் பைத்தியம் பிடித்து விட்டால் அது என்ன, என்ன செய்யச் சொல்லும்? மற்றவர்களின் தலையில் உள்ள ரோமங்களைக் கூட எண்ணிப் பார்க்கச் சொல்லும். பெல்கிரேடிலுள்ள ராஜகோட்டிக் என்பவர் இப்படித்தான் செய்தார். அவர் தமது நண்பர் ஒருவரைப் பிடித்து வைத்துக் கொண்டு அவர் தலையில் உள்ள ரோமங்களை ஒன்று, ஒன்று, ஒன்றாக எண்ணிப் பார்த்தார்.

எழுபத்து நான்கு நாட்கள் இரவு பகலாக எண்ணிப் பார்த்ததில் மொத்தம் 3,344,569 ரோமங்கள் இருக்கின்றன என்று தெரிய வந்தது.

இந்த மகத்தான காரியத்தைச் சாதித்து விட்டதற்காக அவர் பெயர் பிரசித்தமடைந்தது. ஆனால், பாவம் அவருக்குத் தலையைக் காண்பித்துக் கொண்டிருந்த அந்த அப்பாவியைப் பற்றி யாரும் ஒன்றும் சொல்லவில்லை.

ராஜகோட்டிக்கின் கணக்குப் பைத்தியம் முற்றிக் கொண்டே வருகிறது. அவர் ஒரு சோள மூட்டையில் உள்ளதை எண்ணிப் பார்த்து 4,21,350 தானியங்கள் இருப்பதாகக் கண்டுபிடித்தார். கோதுமை மூட்டையில் 10,20,345 மணிகள் இருப்பதாகக் கணக்கிட்டார்.

இந்தப் புள்ளிக் கணக்கு விவரங்கள் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சை சம்பந்தமாகப் பேட்டி காணும் அங்கத்தினர்கள் கண்ணில் படாதிருக்குமாறு அபேட்சகர்கள் பரீட்சைத் தேர்வு சக்தி விநாயகரை வேண்டிக் கொள்வாராக! அவர்கள் இது போன்று ஒரு க்விண்டாலில் எத்தனை கடுகுகள் இருக்கும் என்று கேட்டு விடப் போகிறார்கள்.

க க க

திரைப்பட ஹாஸ்ய நடிகர்கள் இரண்டுவிதம். பஸ்டர் கீட்டன், ஹரோல்ட் லாயிட், சார்லி சாப்ளின் இவர்களைப் போன்று தனியாக நடிப்பவர்கள். வீலர்-உல்ஸி, அப்பட்-காஸ்டெல்லோ, மார்க்ஸ் சகோதரர்கள் மார்ட்டின் லூயி, லாரல் - ஹார்டி. இவர்களைப் போன்று கோஷ்டியாகவோ, நேரடியாகவோ நடிப்பவர்கள். இவர்களுள் லாரல்–ஹார்டி ஜோடியில் ஹார்டி ஏழெட்டு வருடங்களுக்கு முன் இறந்து விட்டார். அது காரணமாகவும் ஓரளவு நோய்வாய்ப்பட்டிருந்ததாலும் லாரல் சென்ற வாரம் காலமானார்.

லாரலும் ஹார்டியும் ஒரு விநோதமான ஜோடி: லாரல் ஒல்லியாய் வற்றல் போன்று இருப்பார். ஹார்டி தொந்தியும் தொப்பையுமாய்ப் பருமனான கைகால்களுடன் இருப்பார். லாரலுக்குச் சப்பட்டையான நீண்ட முகம்; ஹார்டியினுடையது உருண்டையாய்க் கொழு கொழுவென்று இருக்கும். லாரல் முகத்தில் அவர் எதையோ பறி கொடுத்து விட்டது போன்ற கவலை படர்ந்திருக்கும். ஹார்டியின் முகத்தில் களங்கம் இன்று அனுபவித்த குழந்தையின் திருப்திக் களை நிறைந்திருக்கும்.

இவர்களுடைய உடலமைப்பு, தோற்றம், முகபாவம், நடை உடை பாவனை முதலியவற்றில் உள்ள நேர்விரோதமான அம்சங்களே அவர்களைப் பார்த்த மாத்திரத்தில் சிரிப்பை உண்டாக்கும்.

காரியங்களை இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்று ஹார்டி திட்டம் போடுவார். ஆனால் அதன் பயனாகச் சிக்கலில் மாட்டிக் கொள்வது லாரல்தான்.

ஹார்டிக்குப் பல்வலி தாங்க முடியவில்லை. இருவரும் பல் டாக்டரிடம் போகிறார்கள். அங்கே டாக்டர் ஒரு குறடால் பல்லை முரட்டுத்தனமாகப் பிடுங்கி எடுத்து விடுகிறார் — லாரலின் பல் ஒன்றை!

இவர்கள் படங்களில் வரும் ஹாஸ்யச் சம்பவங்கள் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவையல்ல. பெரும்பாலும் சிறுபிள்ளைத்தனமான கோமாளிக் கூத்துக்களாயிருக்கும். எப்படியிருந்தால் என்ன? அவர்கள் இருவரும் அவர்களுக்கெனத் தனியே தயாரிக்கப்பட்ட பின்னணி சங்கீதம் ஒலிக்கப் பிரவேசிக்கும்போது படத்துக்கு ஹாஸ்யக் களை கட்டிவிடும். பிறகு நம்மை மறந்து உலகத்தை மறந்து குழந்தைகளைப் போல் சிரித்துக் கொண்டிருப்போம்.

மேல் உலகத்தில் ஹார்டி, "ஏன் வருவதற்கு இத்தனை தாமதம்? வழியில் விமானம் பழுதாகிவிட்டதா?" என்று தன் சகாவின் ஆவியைக் கேட்டுக் கொண்டிருப்பார்.

தமிழ்ப்பட உலகில் என். எஸ். கிருஷ்ணன் — மதுரம் ஜோடியைத் தவிர, ஹாஸ்ய ஜோடி என்று மதிப்பிடக் கூடிய வேறு யாரும் படங்களில் தோன்றியதில்லை.

தனிப்பட்ட நபர்களே ஹாஸ்ய பாகத்தில் நடித்து வருகிறார்கள். ஆனால், சில வருஷங்களுக்கெல்லாம் அவர்களது தொழில் வாழ்க்கை சோகத்தில் முடிந்துவிடுகிறது.

தமிழ்ப்படாதிபதிகள் ஹாஸ்ய ஜோடிகளைக் கண்டு பிடித்துப் படத்தில் புகுத்திப் பார்த்தால் என்ன? ஜோடி என்றால் ஆணும், பெண்ணுமாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. இந்த முயற்சி பட ஹாஸ்யக் காட்சிகளுக்குப் புத்துயிர் அளிக்கக் கூடும். — என். ஆர்.






புதுமுறையில் உருவாகிய

# ஸன்லைட்

## சலவையிலே அதிக ஒளி தருகிறது !

புதுமை பூண்டு வருகிறது புதுமுறையில் உருவாகிய ஸன்லைட்: அதி நூதனமாக புது மேலுறை, புத்தெழில் வடிவம், எல்லாவற்றிற்கும் மேலாக, அதிக ஒளிதரும் ஆற்றல் ... சலவைக்கு சலவை அதிக ஒளி..

**சலவையிலே அதிக வெண்மை, அதிக ஒளி.**

**இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு**

S. 34-140 TM

# தலைபோய் வாலாட்டம்!



ஆட்டம் டிராவானாலும் ஆகா விட்டாலும் சரி: புகையை 'டிரா'பண்ணத்தயங்கவில்லை நியூஸிலந்து மானேஜர்.

ஒன்பது வருஷங்களுக்கு முன்பு நியூஸிலந்து கோஷ்டி இந்தியாவுக்கு ஆட வந்தது. கடைசி டெஸ்ட் சென்னையில் நிகழ்ந்த போது மன்காடும் ராயும் மட்டுமே 413 ரன்கள் எடுத்து, 537 எண்ணிக்கையை மூன்று விக்கெட் நஷ்டத்துக்குப் பெற்று நியூஸிலந்து கோஷ்டியை ஆட விட்டார்கள். நியூஸிலந்து கோஷ்டியினர் இன்னிங்ஸ் தோல்வியடைந்தார்கள்.

ஒன்பது வருஷங்களுக்குப் பிறகு காப்டன் ரீட் தலைமையில் வந்துள்ள நியூஸிலந்து கோஷ்டியினர் இந்திய கோஷ்டியினரோடு ஆடி ஆட்டத்தை வெற்றி தோல்வியின்றி முடித்து விட்டார்கள்! 1956ம் வருஷம் ஆடிய நம் இந்தியக் கிரிக்கெட் கோஷ்டியைவிட இப்பொழுது ஆடியுள்ள இந்திய ஆட்டக்காரர்களின் தரம் குறைந்து விட்டதா? ஒருவேளை நியூஸிலந்து கோஷ்டியினர் நன்கு பயிற்சி பெற்றுத் தேறி விட்டார்களா? ஆட்டம் வெற்றி தோல்வியின்றி முடிந்ததைக் கண்டதும், பசித்தவன் பழங் கணக்குப் பார்ப்பது போல் நமக்கும் பார்க்கத் தோன்றியது.

பல டெஸ்ட் அனுபவங்கள் பெற்ற திரு பட்டாபிராமனை அணுகிக் கேட்டபோது, "1956ம் வருஷம் கடைசி டெஸ்டில் மன்காடும் ராயும் அத்தனை பெரிய எண்களைக் குவித்தது அம்பயர் அளித்த வரப்பிரசாதமாகும். கண்ணுக்குத் தெரிந்து அவர்கள் 'ரன் அவுட்' ஆகியும் அம்பயர் கைதூக்கி அபயமளிக்க வில்லை. அது கொடுத்திருந்தால் 80, 90 ரன்களுக்குள் அவர்கள் மைதானத்தை விட்டு வந்து சேர்ந்திருப்பார்கள். நியூஸிலந்து கோஷ்டியினர் அன்று சிறிதுகூட முகம் சிணுங்காமல் நடந்து கொண்ட பெருந்தன்மை இன்றும் எனக்குப் பசுமையாக நினைவிருக்கிறது. அத்தகைய பண்பு மிக்க நியூஸிலந்து கோஷ்டியினரின் தரம் இன்று பெருகியிருப்பதால் அவர்கள் தோல்வியுறவில்லை. முன்பெல்லாம் நம் இந்திய கோஷ்டியில் பதினொரு ஆட்டக்காரர்கள் – பதினொரு குதிரைகள் பூட்டிய வண்டியைப் பதினொரு பக்கம் இழுக்கிற மாதிரி—ஆளுக்கொரு பக்கம் இழுத்து, இணைந்தாடும் பண்பு (Team Spirit) இல்லாமலிருந்தார்கள். பட்டாடி கோஷ்டியில் அந்த இணைப்புத் தன்மை இருக்கிறது. இரண்டு கோஷ்டிகளுமே சம பலத்திலிருந்தால் ஆட்டம் வெற்றி தோல்வியின்றித்தானே முடியும்?" என்று தம் அனுபவத்திலிருந்து எடுத்துச் சொன்னார்.

அந்தச் சமயத்தில் அந்தப் பக்கமாக வந்த நியூஸிலந்து கோஷ்டி டாக்டர் டிரெட்வெல், "எங்கள் நியூஸிலந்தில் பல நல்ல பாட்ஸ்மேன்கள் உருவாகப் பரிகத் திட்டம் வைத்



மெய்டன் நட்கர்ணி

மெய்டன் ஓவருக்கு மத்தியில் இந்த மெய்டன் சாயும் ஓடிக்கொண்டிருந்தது!





தலைமையை விட்டுவெடுத்த ஆனந்தராவ்

காரியதரிசி ஸ்ரீசம்



குண்டுமணி

Λ'ஹூக்' குல்லாய் போட்டால் இருபது வயது; குல்லாயை எடுத்துவிட்டாலோ எண்பது வயது!

போலி டம் ரிகர் இல்லே; நிஜ டம்ரிகரே! Λ

வேங்கடராகவன் பந்து வீச்சில் நிறைய மார்க்கன் கூட சேவை சாதிக்கிறார்!

இருக்கிறோம். எந்த பாட்ஸ்மேன், குறைந்த நேரத்தில் அதிக ரன்களை அள்ளிக் குவிக்கிறாரோ, அவருக்குப் பரிசு வழங்கிக் கௌரவிக்கிறோம். ரீட், சட்க்ளிப் எல்லாம் அந்தப் பரிசு பெற்றவர்கள்!'' என்று பெருமையுடன் சொன்னார்.

''அப்படியா? ஆனால் இப்பொழுது ஆட்டம் போகிற போக்கைப் பார்த்தால் 'டிரா'வாகிவிடும் போலிருக்கே?''

''முதல் டெஸ்ட்தானே? அவசரப்பட்டு எந்தக் காரியமும் செய்தால் ஆபத்துத்தானே? அதனால் இந்த முதல் டெஸ்டில் 'ரிஸ்க்' எடுக்கவில்லை நியூஸிலந்து கோஷ்டியினர். அடுத்து வரும் டெஸ்ட்களில் இந்த 'டிரா'ப் பிரச்னை எழாது!'' என்றார் அவர்.

'லஞ்ச் டைம்' வந்ததும் ரேடியோ விமர்சகரும் தாலப்பிரகாஷ்மானோருமான ஆனந்த ராவ் நண்பர்களுக்குத் 'தழை'களை வழங்கித் தாமும் அருந்தினார். நவீன நாகரிகம் தழைகளை விழுங்குவதல்லவா ?

''நமக்குத் தழைகள் வேண்டாம். புல் இருந்தால் ஒருபிளேட் கொடுங்க'' என்றார் 'ரிப்டைல்' இரு கிருஷ்ணசாமி.

''இந்திய கோஷ்டியினர் முதல் நாளே முந்நூறு ரன்களுக்கு மேல் எடுக்காமல் 'பிளாக்' செய்து ஆட்டத்தின் விறுவிறுப்பைக் கெடுத்து விட்டனர்'' என்றார் ஆனந்த ராவ்.

''அதாவது போகட்டும். அதன் பிறகாவது புத்தி வந்து முந்நூற்றைம்பது ரன்கள் இருக்கும் போது நம் இந்திய கோஷ்டி 'டிக்ளேர்' செய்து நியூஸிலந்து கோஷ்டியை உடனே ஆடவிட்டிருந்தால் ஆட்டத்துக்கு ஒரு முடிவு ஏற்பட்டிருக்கும்!'' என்றார் சென்னை கிரிக்கெட் சங்கக் காரியதரிசி ஸ்ரீராம்.

''ஸார்! காப்டன் பட்டாடி தைரியமாக இப்படி 'டிக்ளேர்' செய்யக் கூடியவர்தான். ஆனால் இந்த 'செலக்டர்'களின் தாக்கீதுகள் அல்லவா அவரைத் தைரியமாகச் செயலாக்காதபடி செய்துவிடுகின்றன!'' என்று பத்திரிகை நிருபர் ஒருவர் பளிச்சென்று உண்மையை வெட்டவெளிச்சமாக்கினார்.

ஜெயசிம்மா ஒரு தடவை பந்தை லட்டுப் போல் உயரத் தூக்கியடித்தார். அதை நியூஸிலந்துக் கோஷ்டிக்காரர் பிடித்துவிட்டார். அவர் 'அவுட்'டாகவில்லை. மற்றொரு தடவை அவர் விக்கெட்டில் பந்து பட்டும் அவரை மைதானத்தை விட்டு அனுப்பவில்லை!

''என்ன ஸார், இது! ஜெயசிம்மா இரண்டு தடவை கண்ணுலே 'அவுட்' ஆகிறதைக் கண்டேன். இந்த அம்பயர் அவரை வெளியே அனுப்பவில்லையே?'' என்று அருகில் இருந்தவர் இரைந்தார்.

''ஜெயசிம்மா 'அவுட்' இல்லே. அது பௌலர் கொடுக்கும் வரப் பிரசாதம். 'நோ பால்' பௌலர் வீசினால் பாட்ஸ்மேன் அடித்த பந்தைப் பிடித்தாலும், விக்கெட்டை வீழ்த்தினாலும் செல்லுபடியாகாது!''

''அப்படின்னா நியூஸிலந்து கோஷ்டியாளர் 'நோ பாலா'கவே வீசட்டும்! நம்ம பசங்க 'அவுட்' ஆக மாட்டாங்க!''

''நோ பால் வீசினால் ஒவ்வோர் என்

பெயர் காலிங்க; ஆனால் ஏழடிக்கு முக்கால் இஞ்சு குறைவு!









ளிக்கை எதிர்த்த கோஷ்டிக்குக் கூடுமாக்கும்! பௌலர்கள் ஜாக்கிரதையாக இருப்பாங்க. விரைவாகப் பந்து வீசும் கால் இஞ்சும் மோட்சும் இந்திய கோஷ்டியை அலற அடிச்சுட்டான்களே!''

''அவர் கால் இஞ்சு இல்லே, ஐயா! ஆஜானுபாகுவாக ஏழடிக்கு முக்கால் இஞ்சு குறைச்சல் ஐயா. இந்தக் காலிஞ்ச். பந்தைத் தேக்க வந்த விக்கெட் கீப்பர் இன்ஜினியரே அவர்கைக்குள் நுழைந்து வந்து விட்டார் என்றால் எவ்வளவு உசரம்!''

''அவர் உசரம் கிடக்கு. அவர் வீசிய பந்தையெல்லாம் இன்ஜினியர் நாலு நாலா அடிக்க நொறுக்கிட்டாரே!''

''ஐயோ பாவம்! மோட்ச வீசிய பந்தில் உண்டை வாங்கிய சர்தேசாயை ஸ்டெரெச்சரில் தூக்கிக்கிட்டுப் போகும்படி ஆச்சே!''

''ஆட்டத்தை இந்திய ஆட்டக்காரங்க முதலில் ஸ்டெரெச்சரிலே தூக்கிப் போட்டு அனுப்பிச்சிட்டாங்க. அதனுலே அவங்களுக்கு ஸ்டெரெச்சர் வந்துடுத்து! சரியாக ஆடியிருந்தால் இந்தக் கதி நேருமா?''

''நாலாம் நாள் ஆட்டத்திலே 'டிரா'வாகப் போகிறதுன்னு தெரியுதே. நியூஸிலந்து ஆட்டக்காரர்களைப் பட்டாடி தேநீர் வேளைக்குப் பிறகாவது ஆட விடறதுதானே!''

''மஞ்சரேகர் புரொபஷனல் கிரிக்கெட் ஆட்டக்காரர்! அடுத்த கல்கத்தா டெஸ்டில் அவர் இடம் பெறவில்லை என்பது அவர் காதில் விழுந்துவிட்டது. நூறு போட்டுட்டுத்தான் திரும்பறதுன்னு ஒத்தைக் காலில் நின்னு தவம் செய்து ஒத்தை ஒத்தையா எடுக்கிறார்! பட்டாடியும் அவர் சதம் போடட்டும் என்று பெரிய மனசு பண்ணி ஆட விட்டிருக்கிறார்!''

''மொத்தத்தில் இந்த டெஸ்டில் நியூஸிலந்து இந்திய கிரிக்கெட் கோஷ்டிகளில் முதலில் பொருந்தியவர்கள் விரைவில் 'அவுட்'டாகிக் கடைசியில் வந்த ஆட்டக்காரர்கள் ஜமாய்த்துத் தள்ளினார்கள். நல்ல போய் வாலாடியது.''

''இந்தியக் கோஷ்டியில் கடைசியாக வந்த நட்கர்ணி-இன்ஜினியர் ஆட்டத்தையும் நியூஸிலந்து கோஷ்டியில் இறுதியில் வந்த வார்டு-கால்இஞ்ச் ஆட்டத்தையும் பற்றித்தானே சொல்றேன்!''

''ஆமாம்! இன்னொரு அதிசயம்! நட்கர்ணி 'மெயிடன்' ஓவராக அள்ளிக் குவித்ததைக் கண்டு அவருக்கு 'மெயிடன் நட்கர்ணி!' என்று பெயர் சூட்டி விட்டார்கள்!''

''ஐயா! இந்த மெயிடன் ஓவரைக் காண ஒரு 'மெயிடன்' நாய் வந்ததே. அந்த அபூர்வக் காட்சியைச் சொல்லும்!''

''இந்த இழுபறி ஆட்டத்தில் இதுதான் ரசிக்கும்படியான காட்சி. நாலு நாளும் தேரை நகர்த்திற மாதிரி ஆட்டத்தை மெதுவாக இழுத்துத் தள்ளிப்பிட்டாங்க!''

''அந்தத் தேர் மாதிரி உள்ள திரையை (Side Screen) நகர்த்தும் படலம் வேறு ரசிகர்களின் பொறுமையைச் சோதித்ததே!''

''ஆமாம்! திரை விழுந்தாச்சு. இனி அடுத்த டெஸ்ட்கள் என்ன ஆகிறதோ பார்ப்போம்! நமக்கு ஏற்பட்ட 'டல்' நோய் அங்கும் பற்ருமல் இருக்கணும்!''

''ததாஸ்து!''

டாக்டர்ன்னு வந்ததற்கு சர்தேசாயையேனும் 'அட்டெண்ட்' பண்ண முடிந்ததே!-டாக்டர் டிரென்வெல்





# மூன்றாவது விபத்து



கிரீதான்

## முதல் விபத்து : அது...

அடையாற்றில் பிரசித்தி பெற்று விளங்கும் ஆலமரத்தடியில் உட்கார்ந்து, "என்ன, சொல்லி விட்டாயா?" என்றான் சம்பத், தனக்கு எதிர்த்தாற்போல் உட்கார்ந்திருந்த சரளாவை நோக்கி.

"இல்லை. நீங்கள் சொல்லி விட்டீர்களா?" என்றாள் அவள்.

"இல்லை. இன்னும் சொல்லவில்லை!" என்றான் அவன்.

"உங்களுக்கே அதைச் சொல்ல இன்னும் தைரியம் வராத போது எனக்கு மட்டும் எப்படி வருமாம்?"

"உங்கள் வீட்டுக்கு நீ 'ஒன்னே ஒன்னு கண்ணே கண்ணு' என்று இருக்கிறாய்! நான் அப்படியா இருக்கிறேன்? நால்வரில் ஒருவன்."

"அதற்காக ?"

"நீ சொன்னால் உன் அப்பா கேட்கலாம்; நான் சொன்னால் கேட்பாரா?"

"எல்லாம் கேட்பார்! நீங்கள் முதலில் அதை உங்கள் அப்பாவிடம் சொல்லுங்கள்; அதற்குப் பிறகு நான் அதை என் அப்பாவிடம் சொல்கிறேன்!"

"நீதான் முதலில் சொன்னால் என்னவாம்?"

"நீங்கள்தான் முதலில் சொன்னால் என்னவாம் ?"

"நீ இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தால் அதற்கு ஒரு முடிவே இருக்காது!"

"அதைத்தான் நானும் சொல்கிறேன், நீங்கள் இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தால் அதற்கும் ஒரு முடிவே இருக்காது !"

அவன் சிரித்தான்; அவளும் சிரித்தாள்.





"இப்படி எத்தனை வருடங்களாக நாம் 'அண்டர்கிரவுண்டில்' உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறோம், தெரியுமா?" என்றான் அவன்.

"தெரியும்; இது மூன்றாவது வருடம்!" என்றாள் அவள்.

"இன்னும் எத்தனை வருடங்கள் இப்படியே உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதாக உத்தேசம் ?"

"இரண்டு வருடங்கள்; ஓர் ஐந்து வருடத் திட்டமாவது வேண்டாமா, நாம் துணிந்து நம் பெற்றோரிடம் சொல்ல?"

"அது வரையில் என்னால் பொறுக்க முடியாது !"

அவன் வெருண்டான்; அதுதான் சமயமென்று அவள் அவனுக்கு வீரமூட்டினாள் :

"பொறுக்கமுடியாவிட்டால் பொங்கி எழுங்கள் !"

"பொங்கி எழுந்து ....."

"உங்கள் அப்பாவிடம் விஷயத்தைச் சொல்லுங்கள்!"

"சொன்னால் அவ்வளவுதான்; அவரும் பொங்கி எழுந்து விடுவார் !"

"பொங்கி எழுந்தால் என்ன, உங்கள் அம்மாவைக் கூப்பிட்டுக் கொஞ்சம் துழாவி விடச் சொன்னால் போகிறது!"

"அம்மா துழாவி விடமாட்டாள்; அதற்

குப் பதிலாக அவனும் அவருடன் சேர்ந்து போங்க ஆரம்பித்து விடுவான். அப்புறம் நீதான் வரவேண்டும், அவர்களை வடித்து நிமிர்த்த!''

''நான் அவர்களை வடித்து நிமிர்த்துவதற்கு முன்னாலும், அவர்கள் என்னை வடிக்காமலே நிமிர்த்தி விட்டால்?''

''அதைப் பார்த்துக் கொண்டு சும்மாவா இருப்பேன், நான்?''

அவன் தன் சட்டையின் கைகளை மடித்து உயர்த்தினான்; அவள் அதைப் பிரித்து விட்டுச் சொன்னாள்:

''அந்த 'வீர'த்தில் இப்போதே கொஞ்சம் 'அட்வான்ஸ்' வாங்கிக் கொள்ளலாங்களேன்? எனக்கும் நல்லது; உங்களுக்கும் நல்லது!''



''நீ ரொம்பப் படித்து விட்டதாகப் பீற்றிக் கொள்ளாதே! என்ன இருந்தாலும், நான் உன்னைவிட, ஒரு எழுத்து அதிகமாகப் படிச்சவன்; கொஞ்சம் நினைவு வைச்சுக்கோ!''
''அதான் தெரியுமே? நான் பி. ஏ. நீங்கள் பி. யு. சி!''

''அந்த 'அட்வான்'ஸை நீயே உன் 'வீர'த்திலிருந்து வாங்கிக் கொண்டால் என்னவாம்?''

''வீரம் 'புருஷ லட்சணம்' என்று சொல்வார்கள்; அது 'புருஷி லட்சணம்' என்று இப்பொழுதல்லவா தெரிகிறது எனக்கு!''

''தெரிந்ததோ இல்லையோ? சரி, நான் வருகிறேன்!'' என்று அவள் எரிச்சலுடன் எழுந்தாள்.

''நான் வரவேண்டாமா?'' என்று கேட்டான் அவன்.

''வந்து தொலை!'' என்று அவள் சற்றுத் தூரத்தில் நிறுத்தி வைக்கப் பட்டிருந்த 'ஸ்கூட்ட'ரை நோக்கி நடந்தாள்; அவன் சிரித்துக் கொண்டே அவளைப் பின் தொடர்ந்தான்.

## இரண்டாவது விபத்து: இது....

'காதல் விபத்து'க்குள்ளான இவர்கள் இருவரும் வழக்கம் போல் ஸ்கூட்டரின் மேல் ஏறி, 'மின்னல் வேகத்'தில் தங்கள் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்த போது, வழியில் ஒரு பாலம் குறுக்கிட்டது. அந்தப் பாலத்தின் மேல் இவர்களுக்கு முன்னால் 'அன்ன நடை' நடந்து சென்று கொண்டிருந்த ஒரு கட்டை வண்டி இவர்களுடைய பொறுமையை வெகுவாகச் சோதிக்கவே, அதை முந்துவதற்காக வலது கைப் பக்கமாகத் தன் வாகனத்தைத் திருப்பி, தான் வந்த வேகத்திலேயே மேலே செல்லமுயன்றான் இவன். அப்போது எதிர்த்தாற் போல் வந்து கொண்டிருந்த ஒரு ஜட்காவை முந்திக் கொண்டு வந்த லாரி ஒன்று இவன் ஸ்கூட்டரின் மோத, இருவரும் ஏககாலத்தில் தூக்கி எறியப்பட்டு மூர்ச்சையானார்கள். காயம் அவ்வளவு அதிகம் இல்லையென்றாலும், அதற்குப் பிறகு என்ன நடந்ததென்று அவனுக்கும் தெரியவில்லை; அவளுக்கும் தெரியவில்லை.

## மூன்றாவது விபத்து: எது?....

மறு நாள் காலை மருத்துவ மனையில் கண் விழித்த சரளா, தனக்குப் பக்கத்தில் போடப்பட்டிருந்த இன்னொரு கட்டிலின் மேல் உட்கார்ந்து, தன்னையே கவலையுடன் பார்த்துக் கொண்டிருந்த சம்பத்தை நோக்கி, ''எப்படி இருந்தது இரண்டாவது விபத்து?'' என்றாள் மென்னகையுடன்.

''இதற்கு முன்னால் நமக்கு நேர்ந்த 'காதல் விபத்'தையும் சேர்த்துச் சொல்கிறேனாக்கும், நான்!'' என்றான் அவன்.

''ஓ, அதைச் சொல்கிறீரா?'' என்றாள் அவள்.

அப்போது கையில் ஒரு செய்தித் தாளுடன் உள்ளே நுழைந்த சரளாவின்



# In a man's world




J.K. Helene Curtis

Sole Distributors in India: **SPENCER & CO. LTD.** 153 Mount Rd., Madras 2
Spencers Building, Forjett Street, Bombay 26
70 Diamond Harbour Rd., Kidderpore, Calcutta 23 • 19A Alipore Rd., Delhi 6,

அப்பா, "ஏன் சரளா, இப்படிக் கூடச் செய்யலாமா நீ? இந்தப் பத்திரிகையைப் பார், என் மானம் உன்னால் எப்படிப் போயிருக்கிறதென்று தெரியும் உனக்கு!" என்றார், அவளுக்கு முன்னால் அதை விட்டெறிந்து.

அவள் பார்த்தாள்:

"நேற்று நடந்த ஸ்கூட்டர் விபத்தில் சிக்கிய சரளா, பிரசித்தி பெற்ற டாக்டர் சாமிநாதனின் மகள். அதே ஸ்கூட்டரில் அவளைப் பின்னால் ஏற்றிக் கொண்டு வந்த சம்பத், பிரபல வழக்கறிஞர் வைத்தியநாதனின் மகன். இவர்கள் இருவரும் மருத்துவக் கல்லூரியில் படிப்பவர்கள் என்றும், நீண்ட நாட்களாகவே ஒருவரையொருவர் காதலித்து வருபவர்கள் என்றும் தெரிகிறது."

இதை அவள் படித்து முடித்த அதே நேரத்தில், அதே செய்தி வெளியிடப்பட்டிருந்த இன்னொரு செய்தித் தாளுடன் சம்பத்தின் அப்பா அங்கே வந்து, "ஏன்டா சம்பத், இப்படிக் கூட என் மானத்தை வாங்கலாமா நீ? இதைப் படித்துப் பார்!" என்று அவனுக்கு முன்னால் அதை விட்டெறிய, அவன் அதைப் பார்த்து விட்டு விழிக்க, "இனி ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. நம் இருவருடைய மானமும் தப்பிப் பிழைக்க!" என்றார் சாமிநாதன்.

"அது என்ன வழி?" என்றார் வைத்தியநாதன்.

"இப்படி வாருங்கள், சொல்கிறேன்!" என்று அவரை அழைத்துக் கொண்டு வெளியே சென்றார் சாமிநாதன்.

அவருடைய தலை மறைந்ததும், "இனி யாரும் யாரிடமும் அதைச் சொல்ல வேண்டியதில்லை. வாழ்க, இரண்டாவது விபத்து!" என்றாள் சரளா; "வருக மூன்றாவது விபத்து!" என்றான் சம்பத், 'கல்யாணத்தையும் ஒரு விபத்'தாகக் கருதி!

## சோகம் எங்கே?



"ஒன்னும் சோகமில்லேங்க, இந்தப் புத்தக வியாபாரம்! உங்களைப் போன்ற விற்பனையாளருக்கு இருபத்தைந்து சதவிகிதம், முப்பத்தைந்து சதவிகிதம் 'கமிஷன்' கொடுத்து, எழுத்தாளர்களுக்குப் பதினைந்து சதவிகிதம், இருபது சதவிகிதம் 'ராயல்டி' கொடுத்து........"

"எதுக்கய்யா, ராயல்டி கொடுக்கணும்? 'அவுட்ரைட்டா' வாங்கறது!"

"அதெல்லாம் அந்தக் காலம்; இந்தக் காலத்திலே எவன் அவுட்ரைட்டுக்குப் புத்தகம் தரான்?"

"அவன் தரமாட்டேன்னுதான் — சொல்லுவான், நாம்தான் தர வைக்கணும்!"

"அது எப்படி முடியுங்க?"

"ராயல்டின்னு புத்தகம் விற்க விற்கத்தானேய்யா, பணம் கொடுக்கணும்? 'சரி, தரே'ன்னு வாங்கறது. அவனுக்குத் தெரிஞ்சி ஆயிரம் பிரதி போட்டா, தெரியாம ரெண்டாயிரம் பிரதி போடறது. மூணு மாசத்துக்கு ஒரு தரம் புத்தக விற்பனையைப் பற்றி அவன் கணக்குக் கேட்டா, விற்பது முந்நூறாயிருந்தாலும் மூணு தான் விற்றதுன்னு கணக்குக் காட்டி, ஒரு சில பைசாக்கணக்கிலே ராயல்டியை அனுப்பி வைக்கிறது. இப்படி நாலு தடவை அனுப்பினா அஞ்சாவது தடவை அவனே கதறிக்கிட்டு வந்து, 'முழுசா ஒரு ரூபாயாவது எனக்கு எந்த வருஷத்திலே ராயல்டி கிடைக்கும்'னு கேட்பான். அதுதான் சமயம்னு, 'அவுட்ரைட்டா வேணும்னு உங்க புத்தகத்தைக் கொடுங்க; சகல உரிமைகளுக்கும் சேர்த்து முழுசா ஐம்பது ரூபா இப்போவே கொடுத்துடறேன்'னு சொல்லுங்க. எழுத்தாளனுக்குத்தான் அவன் பொறக்கும்போதே தரித்திரமும் கூடவே பொறந்திருக்குமே, ரெண்டு கையையும் நீட்டி வாங்கிக்கிட்டுப் போறான்! இப்போவாவது தெரிஞ்சுதா, சோகம் எங்கே இருக்குன்னு?"

"தெரிஞ்சுதுங்க!"



குறைப்பட்டவர்: **பிரசுரகர்த்தர்**

நிவர்த்தி செய்தவர்: **விற்பனையாளர்**

தகவல்: **ஓர் எழுத்தாளர்**

## தொழில் நுட்பம்

இந்தியா முழுவதிலிருந்தும் தாமாகவே தேடிவந்த நற்சாட்சிக் கடிதங்கள் கூறுகின்றன :

# போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் ஆற்றும் போர்ஹான்ஸ் பற்பசையின் நன்மைகளை எல்லா வயதினரும் போற்றுகின்றனர்.

## அவர்கள் கூறுவதைப் படித்துப் பாருங்களேன் :

"இன்று என் பற்களுக்கு உள்ள ஒளிமயமான வெண்மை, நெடுங்காலமாக நான் உபயோகித்து வரும் போர்ஹான்ஸ் பற்பசையினால்தான். வெற்றிலையும் புகையிலையும் போடப் பழகிவிட்ட 27 வயது இளைஞன் நான். உங்களுக்குத் தெரியும், புகையிலை போடுவதனால் பற்களில் காவிக் கறையேறிவிடுகிறது. ஆயினும், போர்ஹான்ஸ் பற்பசை செய்திட்ட மாயம், கறைகள் யாவுமே அகன்று, பற்கள் வெண்மை மயமாகப் பளிச்சிடுகின்றன"

பி.பி., பெங்களூர்.

"உங்கள் போர்ஹான்ஸ் பற்பசை உபயோகித்ததின் பயனாக, கொடும் ஈறு உபாதைகளினின்று நான் குணமடைந்தது பற்றி உங்களுக்குக் கூறக் கடமைப்பட்டுள்ளேன். தவறாமல் இப்போதெல்லாம் நான் போர்ஹான்ஸ் தேய்த்துவரும் காரணத்தினால், அடி நாட்களில் என்னை வருத்திய ஈறு கோளாறு, ஈறு அழற்சி, வாய் நாற்றம் ஆகியவற்றினின்று விடுபட்டிருக்கிறேன். இறைவன் அருள் பெற்று நீடூழி ஓங்குக போர்ஹான்ஸ் என்று போற்ற விரும்புகிறேன்"

ஹெச். ஆர். எஸ்., பம்பாய்

"இளமை தொட்டே நான் போர்ஹான்ஸ் பற்பசை உபயோகித்து வருகிறேன். என் குடும்பத்தினருக்கும் அதுவே பழக்கம். பற்களை வெண்மை ஒளியுடனும், ஈறுகளை திடமான ஆரோக்கியத்துடனும் வைத்துக்கொள்ள எங்களுக்கு அதுவே உறுதுணையென உணர்ந்துள்ளோம்"

(திருமதி) கே. வி., பெங்களூர்

*இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரே மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.




**போர்ஹான்ஸ்:** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பெற்ற பற்பசை

இலவசம்! "CARE OF THE TEETH AND GUMS" என்ற ஆங்கில வண்ண நூல்-பற்களின் பராமரிப்பு முறையைப் படங்களோடு விளக்கும் இப் புத்தகத்தைப் பெற விரும்புவீர்களாயின், (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் வில்லைகளை அனுப்புங்கள், டிபார்ட்மெண்ட் K.6, மானேர்ஸ் டெண்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய் 1.

பெயர்.................................................

விலாசம்.................................................

ஒரு லிவோ காப்பிக் கொட்டைக்காக நின்ற 'க்யூ' வரிசையில் தனக்கு முன் நின்ற வரிசையில் இருந்து ஒரு முகம் எதற்கோ திரும்பிப் பார்த்த போது, சுமதிக்கு அவள் கண்களையே நம்ப முடியவில்லை. மறுபடியும் மறுபடியும் பார்த்தாள். சந்தேகமேயில்லை, ரேணுதான்.

''போ, இன்னும் கால்மணியில் வந்து விட வேண்டா, கண்ணு! தங்கச்சி தனியாயிருக்கும் பார், கவனமாகப் போ, பத்திரம்!''

எட்டி ஒரு பஞ்சு மிட்டாயைச் சப்பிக் கொண்டு நின்ற ஐந்து வயசுப் பையனிடம் சொன்னவள் நிச்சயமாக ரேணுவேதான்.

ஐந்து வயசுப் பையனுக்குப் பிறகு ஒரு தங்கச்சி கூட இருக்கிறாளா? ரேணுவுக்கு அக்காவாக, தங்கையாக ஒருகால் இருக்கலாமோ என்ற ஐயம்கூட இல்லை; வலது கண்ணின் அருகில் பொட்டுபோல் நீளமாக ஒரு கருப்பு மச்சம் அவளுக்கு உண்டு. அந்த நாட்களில் அதை மறைத்து வெகு கவனமாகப் பூசகப் பூசிக் கொண்டிருப்பாள்; ஆனால், செம்பட்டை பறக்க, வாரியது தெரியாமல் பறக்க விடப்பட்ட குட்டைக் கூந்தலும், போலிப் புருவமும், செஞ்சாய உதடுகளும் மாற, அவள் எப்படி இந்தக் காப்பிக் கொட்டை வரிசைக்கு வந்தாள்? கல்லூரி நாட்களில் ரேணு சேலை உடுத்திச் சுமதி பார்த்திருக்கவில்லை. ஜீன்ஸ் —ஸ்லாக்— இப்படிப் புரட்சி உடை உடுத்து, தன் சுழற்காற்றுத் தன்மையினால் கல்லூரி விடுதியையே ஒரு கலக்குக் கலக்கிய ரேணுவா இவள்? ஜாஸ், நடனங்கள், பார்ட்டி, உல்லாசக் கேளிக்கைகள் போன்ற சூழலில் இருக்க வேண்டிய ரேணு 'தங்கச்சி தனியாயிருக்கும், பார்!' என்று குழையும் ஓர் அம்மாவாக, கடைச் சாமானுக்கு வரிசை நிற்கும் ஏழை வீட்டு ராணியாக மாறி விட்ட அதிசயம் எப்படி நிகழ்ந்தது?

கூந்தலை எண்ணெய் படிய வாரிப் பின்னல் சிறு கொண்டையாக முடிந்து கொண்டிருந்தாள் ரேணு. ஒரு



# மாற்றம்

கருப்பு வாயில் புடவை. முகத்தில் மையோ, பூச்சோ ஒன்றும் தெரியவில்லை. நெற்றியில் குங்குமம்தான் பளிச்சென்று தெரிந்தது!

ரேணுவின் அடுத்த அறையில் கல்லூரி விடுதியில் இரண்டாண்டுகள் சுமதி வசித்திருக்கிறாள். அடுத்தடுத்த அறைக்காரிகளானாலும், வெவ்வேறு துருவங்களின் தன்மைகளினால், அதிகப் பழக்கம் பேச்சுவார்த்தைகள் கிடையாது என்பது என்னவோ உண்மைதான். ஆனால் அச் சுழற் காற்று, கல்லூரிக்கு வெளியே செல்வதிலேயே கண்ணாக இருந்ததையும், வாயிலிலே அவளையும் அவள் கோஷ்

## ராஜம் கிருஷ்ணன்

டித் தோழிகளையும் எதிர்நோக்கித் தங்களைக் காதல் மன்னர்களாக எண்ணிக் கொண்டு வாயிலிலோ, பஸ் நிறுத்தத்திலோ வட்டமிடும் இளைஞர்களையும் அறியாமல் எப்படி இருக்க முடியும்? ரேணுவின் தந்தை ஜெனரல்தான் ராணிப் பேட்டையிலோ

**அட்டைப்படக் கதை**

குடியாத்தத்திலோ டாக்டராக இருந்ததாக அவளுக்கு நினைவு. மிகவும் கண்ணியமான குடும்பம். அவர் பல முறை மகளைக் கண்டிக்க, எதிர்பாராமல் வந்ததையும் அவள் அறிவாள். கல்லூரித் தமிழ் அவளைப் பொறுத்துக் கொண்டிருந்ததற்கு, தந்தையின் நற்பண்புகளேகூடக் காரணம் என்று சொல்லலாம்.

குடிப் பண்பின் காரணமே இம்மாற்றமென்று கமலியால் எண்ண முடியவில்லை. ஏனெனில், லட்சம் லட்சமாகக் குவிக்கும் கிரிமினல் வக்கீல் ஒருவரின் ஒரே வாரிசான ஓர் அழகனுடன் ரேணு இலை மறைவு காய் மறைவுகூட இன்றிப் பழகிக் கொண்டிருந்தாள். திரையில் தோன்றும் கவர்ச்சிச் சிங்காரிகள்கூடப் பிச்சை வாங்க வேண்டும் என்று தோன்றும் வண்ணம், ஸ்கூட்டர் உல்லாச சவாரிக்கு அலங்கரித்துக் கொண்டு அவள் வெவ்வேறு இளைஞர்களின்பின் அமர்ந்திருந்தது உண்டு. என்றாலும், இந்திரகுமாரும் அவளும் மிக நெருக்கமாகப் பழகியிருந்ததால், வரும் கோடையில் அவன் அவளை மணந்து கொள்ளப் போகிறான் என்ற பேச்சுக்கூட அப்போது அடிபட்டது.

கமலி அந்தக் கோடைக்குப்பின் படிக்க வரவில்லை. ஆனால் இந்திர குமாருக்கும் வேறொரு நங்கைக்கும் திருமணமான செய்தியையும் புகைப்படத்தையும் கமலி அந்தக் கோடையிலேயே பத்திரிகையில் கண்டிருந்தாள். ரேணுவை அப்போது நினைந்து உள்ளூரச் சிரித்துக் கொண்டாள். அவள் என்ன, அகல்விளக்கின் சுடரொளியா? காற்றுக்கும் மழைக்கும் அஞ்சி அணைந்துவிட? நாணமும் அச்சமும் என்னவென்று கேட்கப் பழகியவளுக்கு அந்தக் காதல் வீழ்ச்சி, ஏதோ கொம்புபட்டு உடையின் ஒருபுறத்தில்கிழிந்து விட்டதற்கு மேல் நஷ்ட உணர்வைத் தந்திராது என்று நினைத்தாள்.

இப்போது அதே ரேணு, மூடியிருக்கும் கடைக் கதவைப் பார்த்துக் கொண்டு, காப்பிக் கொட்டைக்கு நிற்கும் கும்பலில் நிற்கிறாள்! இந்த வேக நாகரிக வாழ்விலே எத்தனை எத்தனையோ மாறுதல்கள் வந்திருக்கின்றன; மறுப்பதற்கில்லை. தான் நடக்கும் இடங்களிலெல்லாம் தண்ணீரைத் தெளித்துக் கொண்டு நடக்கும் ஆசாரப் பெரியம்மாள்கூட, வயசு வந்த பேரப்பெண் 'ஸ்கர்ட்' அணிந்து கல்லூரிக்குப் போவதைப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். அடுப்படிப் பெண்கள் எல்லாரிடமும் மாறுதல் காணப்படுகிறது. அடுப்புக்களெல்லாம்கூட மாறிவிட்டன. இந்த வேக முன்னேற்றப் பரபரப்பில் ரேணுவின் எதிர்மறை மாற்றம் நம்ப முடியாததாக இருக்கிறதே ?

கடை திறந்து, ரேணு அவள் முறை வந்து சாமானை வாங்கிக் கொண்டு அகன்றபோது, கமலி கடைப்படியின் அருகில் நகர்ந்திருந்தாள். கமலியை அவள் பார்த்தாள். எதிர்பாராச் சந்திப்பின் வியப்பை விழிகளில் கொட்டிக் கவிவிட்டாலும், இணக்கமான புன்னகை ஒன்றை உதிர்த்துவிட்டு அவள் பையுடன் விரைந்தாள்.

''கமலி அக்கா!'' என்ற குரல் கேட்டது.

'இந்தக் காப்பிக்கொட்டை வரிசையில் இன்று யாரை யெல்லாம் சந்திக்கப் போகிறோம்' என்று வியந்தவண்ணம் கமலி குரல் வந்த பக்கம் திரும்பினாள்.

''நரசிம்மனா? என்ன விசேஷம்? தாத்தா பாட்டி சுகமா? உன்னை நான் கவனிக்கவே யில்லை.''

''அன்று வீடு வேண்டும் என்று சொன்னீராமே? பாட்டிதான் உங்களிடம் சொல்லி விட்டு வரச் சொன்னாள். இப்போது, எங்கள் வீட்டில் மாடி காலியாக இருக்கிறது....'' என்றான் நண்பர் மகனான அந்தப் பையன்.

''அப்படியா? நான் கொஞ்ச நாளைக்குமுன் தான் விசாரித்தேன், யாரோ அப்போது தான் குடி வந்ததாகச் சொன்னார்களே?''

''அவர்கள் வேறிடம் பார்த்துக் கொண்டு போய் விட்டார்கள். உங்களுக்கு வேண்டும் என்றால் நீங்கள் இப்போதே வந்தால் நல்லதென்று தாத்தாவும் சொன்னார்....''

''காப்பிக்கொட்டை வாங்கிக் கொண்டு வருகிறேன், போய்ச் சொல்லு!''

கமலி கையில் பையுடன் விரைந்தாள். நான்கு தெருக்கள் தாண்டி ஒரு சந்து பிரியும் மூலையில் உள்ள அவ்வீட்டின் பகுதி மிகவும் வசதியானது. வீட்டுக்காரர்களோ, கமலிக்குப் பெற்றோர் முறைக்குப் பழகியவர்கள். வாசலிலேயே பாட்டி காத்திருந்தாள். ''எத்தனையோ பேர் அதற்குள் கேட்கிறார்கள்; நீயே வர வேண்டும் என்று ஒரு சபலம். க்யூவில் நிற்பதாக நரசிம்மன்தான் வந்து சொன்னான்; விரட்டினேன்....''

வழக்கமான விசாரணைகளுக்குப் பிறகு, ''மாடியில் இருந்தவர்கள் மாற்றலாகிப் போய் விட்டார்களாக்கும்?'' என்று கேட்டாள் கமலி.

''என்னவோ பிடிக்கவில்லை. உன்னிடம் சொல்வதற்கென்ன? என்னை உனக்குத் தெரியாதா? அந்த நாளில் ஏகாதசி என்றும் பல்லில் பச்சைத் தண்ணீர் படாமல் இருப்பேன். இப்போது ஜோராட்டம் காப்பிகூடக் குடிக்கிறேன். எழுந்தால் படுக்கப் போகும் வரையில் குழந்தையைத் தூக்கிக் கொள்வதானும்கூடச் சட்டை இல்லையா என்று பார்ப்பேன். இப்போது அந்தக் காலமா, கமி?''

பாட்டி இதெல்லாம் எதற்குச் சொல்கிறாள்?

''பூவாக, காற்றுப் படாமல் உங்கப்பா உன்னை வளர்த்தான். நீயும்தான் இந்தக் காப்பிக் கொட்டைக்கு க்யூவில் நிற்கிறாய். காலம் போகும் வேகத்தில், நாமும் இந்த இழுப்புக்கு இணையக் கொஞ்சமேனும் மாறுத போனால் விவேகமாகப் படவில்லை. 'அவன் கிணற்றைத் தொடுகிறான், வாளியைத் தொடுகிறான்' என்றெல்லாம் நீ சொல்ல மாட்டாயோ?'' பாட்டி சிரித்தாள்; ஓய்க் காதில் ஓலையில்லை, ஆடுவதற்கு.

''நீங்கள் என்னமோ புதிர் போடுகிறீர்களே? யாரை என்ன சொல்கிறீர்கள் என்றே புரியவில்லையே ?''



சருமத்தின்
உன்னதமான
போஷாக்குக்கு...




நெ. 1

# லிம்டா

## சோப்பு

விசேஷ பாதுகாப்பு அளிக்கிறது

வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ், கள்ளிக்கோட்டை
பம்பாய் ஆபீஸ் : தபால் பெட்டி நெ. 3254, பம்பாய்-3

RS-VSW-TAM-106

"பக்கத்துப் போர்ஷனில் ரொம்ப நாளாகத்தான் இருக்கிறார்கள். அவனுக்கு ஹார்பரில் வேலை. காலையிலேயே போய் விடுவான். கல்யாணம் பண்ணி முதன் முதலாக இங்குதான் அழைத்து வந்தான். சட்டுச் சட்டென்று எட்டு வருஷத்துக்குள் அஞ்சைப் பெற்றுப் போட்டு விட்டுப் போன வருஷம் தான், தீபாவளி கழிந்ததும், போய்ச் சேர்ந்தாள். வேறு ஒரு மனிதர் நாதியில்லை. இவன் ஒரு மாசத்துக்கெல்லாம், அதே அவள் போன நர்ஸிங்ஹோமில் நர்ஸாயிருந்தாளாம், அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு வந்தானென்று தோன்றுகிறது. அதையெல்லாம் நாம் ஏன் கேட்க வேண்டுமடி? வெளியிலே பார்க்கத் தங்கமாய்ப் பழகுகிறாள். அந்த ஐந்து குழந்தைகளுக்கும் தாயாய் இருக்கிறாளே. அதைச் சொன்னால் போதுமா? நமக்கு ஆகாத வாசனை எதுவும் வீட்டில் சமைப்பதில்லை; சேர்ப்பதில்லை. இதற்கு மேல் என்ன வேண்டும் நமக்கு? அவர்களைக் காலி செய்யச் சொல்ல வேண்டும் என்றார்கள். அது சரியாகப்படவில்லை எனக்கே. அதற்காக மாடியில் இருந்தவர்கள் காலி செய்து விட்டார்கள்."

"இந்தக் காலத்தில்கூட இப்படிச் சொல்றவர்கள் இருக்கிறார்களா?" என்று சுமதி கேட்டுக் கொண்டே மாடிக்குப் போனாள்.

அடுத்த பகுதிக்கும் இவர்களுக்கும் உண்மையில் ஓர் ஒட்டுறவுக்கும் இடமில்லை. மேலிருந்து அந்தப் பகுதியில் இருப்பவர்களைப் பார்க்கக் கூட முடியாது. எப்போதேனும் பின்புறம் கிணற்று நீருக்கு வருவானாக இருக்கும்.

சுமதி அன்றே தீர்மானமாகக் கூறி விட்டுத் திரும்பினாள்.

அடுத்த ஞாயிறன்றே புதிய வீட்டுக்கு, இரண்டு குழந்தைகளும் கணவன் மனைவியுமான அவர்கள் குடும்பம் இடம் பெயர்ந்தது. சாமான்களை ஒதுக்கி வைத்து, புதிய வீட்டின் மகிழ்ச்சியை ஓடியாடிக் கொண்டாடும் குழந்தைகளை ஒழுங்குக்குள் அமைத்து ஆக்கிப் படைத்த அயர்வில் முதல் நாள் கழிந்ததே சுமதிக்குத் தெரியவில்லை. மறு நாள் நடராஜனுக்குத் தொழிற்சாலையில் இரவு வேலை. ஏழரை மணிக்கே சாப்பாட்டை முடித்துக்கொண்டு அவன் கிளம்பி விட்டான்.

குழந்தைகளுக்கும் சாப்பாடு போட்டுப் படுக்க வைத்தாள். இந்தப் புதிய வீட்டில், இரவு வேலை நாட்களுக்குத் துணைக்கு வேலைக்காரி வேண்டியதில்லை என்ற நிம்மதியுடன் அவள் மெள்ள மாடிக் கதவைச் சாத்திக் கொண்டு மொட்டை மாடிக்கு ஏறினாள்.

நல்ல நிலவு. காற்றும் இதமாக வந்து கொண்டிருந்தது. கைப் பிடியில் சாய்ந்து தெருவைப் பார்க்கலாமோ என்று வருகையில் புகைபோக்கியின் அருகில் உரத்த குரல் ஒலித்தது.

சுமதி விக்கித்துப் போனாள். அது கீழ்த் தளத்திலிருந்து வரும் குரல் என்று தெரியக் கூட முடியாமல் நின்றாள்.
















"நான் உன்னை நம்ப முடியாது. அது ஏனென்று உனக்குச் சொல்ல வேண்டியதில்லை. தெரியுமா?"

ஆங்கிலத்தில் வந்த சொற்கள்தான். ஆனால் நிக்கலை'த் தெறித்தது.

இந்த ஆண் குரலுக்குக் கண்ணீரும் கம்பீரமுமே புரிய ஓர் எதிர்க் குரல் ஒலித்தது புரிந்தது: ஆங்கிலம் என்பதும் புரிந்தது. ஆனால் விவரம் தெளிவாகப் புரியவில்லை.

மறுபடியும் ஆண் குரல்.

"நான் உன்னை நம்பாமலே சித்திரவதை அநுபவிப்பேன்; நீயும் அநுபவிப்பாய். இதைத் தவிர்க்கவே முடியாது...."

மடேர் மடேர் என்று அவன் தலையில் அடித்துக் கொள்கிறானா, அவளை அடிக்கிறானா? சுமதிக்கு உடல் நடுங்கியது.

"ஏன் சத்தம் போடுகிறீர்கள்? குழந்தைகள் கேட்டு விடுவார்கள் என்று சமையல் அறைக்கு ஓடி வந்தேன். அக்கம் பக்கம் புதியவர்கள். தயவுசெய்து எல்லாம் மறந்து விடாதீர்கள்."

அவள் அழுது கெஞ்சி மன்றாடுகிறாள்.

சுமதிக்குக் காலடியில் ஆறு ஓடுவது போல் பிரமை உண்டாயிற்று. அந்தச் சிரிப்பில்..... அக்குரலுக்கு உடையவள்... ரேணுவோ? ரேணுதான். ரேணு....."

"நான் திருப்பித் திருப்பிச் சொல்கிறேன். என்னை நம்புங்கள். நீங்கள் நினைப்பது போன்ற சந்தேகங்களுக்கு நிச்சயமாக என்னிடம் குற்றமில்லை. இன்று, ஸ்ரீனிவாச நகரில் முன்பே, நான் சொல்லி இருந்தேனே, அந்தப் பெண்ணுக்குச் சுகப்பிரசவமாயிற்று. மூன்று மணிக்கு வந்து கூப்பிட்டார்கள். உங்களுக்குப் போன் செய்தேன். நீங்கள் வீட்டில் இல்லை. பிறகு, நீங்கள் சொல்லி அழைத்துப் போனவர் கேஸ்தான் என்று போனேன். ஏழு மணிக்குத் திரும்பி விட்டேன். இன்று ஜாது பால் வாங்கி, மகுடம் போட்டுக் கொடுத்திருக்கிறான். வெகு கெட்டிக்காரி. நான் சமையலை முடித்தேன். நீங்கள் வந்து விட்டீர்கள்....."

அன்றாட நிகழ்ச்சியை, போக்குவரத்துக்களை, அவள் இழை பிசகாமல் அவனிடம் ஒப்புவிக்கிறாள்.

எந்த ஆடவனுக்கும் இப்படி ஒரு பெண்ணிடம் ஒப்புவிக்கும் கடமையோ நிர்ப்பந்தமோ இருக்கிறதென்று தோன்றியிருக்காது. ஏனெனில், ஆடவனின் தவறுகளுக்கும் சலனங்களுக்கும் 'இயல்பு' என்றதொரு சார்படைக்கப்பட்டு இருக்கிறதே? கடலில் சலனம் உண்டாவது இயல்பு. அலை மோதலாம். ஆனால் பூமி அதிரலாமோ?

ரேணு கலப்பற்ற தமிழினம் கண்டு கொள்ள முடியாத மேற்கத்தியச் சாயலுடன் ஆங்கிலத்தில்தான் பேசினாள். ஆனால் அந்தக் கெஞ்சலும், மன்றாடலும், சமாதானமும் பேச்சாகப் பிறக்க இடமளித்த உள்ளமோ இந்த மண்ணில் உருவாகிய பூ. இதில் இம் மண்ணுக்குரிய பண்பைத் தவிர வேறு பூச்சு வாடையே அடிக்கவில்லையே!

இம்மண்ணின் இயல்பான பண்புக்கு உரியதல்லாத நடை, உடை, பாவனை எல்லாவற்றையும் அந்த இளமையின் மோகத்திலே மேற்கொண்டாளே அதே முறைப்படி, ஒரு முறை காதலில் விழுந்ததும் ஏன் பொருட்படுத்தாமல் எழுந்திருக்கவில்லை அவள்?

அவனுடைய அழகுக்கும், படிப்பு முதலிய தகுதிகளுக்கும், அவனைப் போன்றதொரு பெண் நியாயமாக ஆசைப்படும் உரிமைகளுக்கெல்லாம் அருகதை இல்லை என்று நினைக்கச் சாணுகக் குறுகி நிற்கிறாளே? சுழற்காற்றில் பெண்மைக்குரிய மென்மையான உயர்வுகளை இரையாக்கியபின் வந்த அமைதியோ? இது அமைதி இல்லையே? ஈந்து குழந்தைகளுக்காக ஒருத்திக்கு இடமளித்திருக்கும் ஒருவனின் தீராத மனப் புகைச்சலில் கருகுவதை அமைதி என்று கூற முடியுமோ?

**ம**றுநாட் காலையில் சுமதி மேல் மாடியில் துணிகளை உலர்த்திக் கொண்டிருக்கையில் ரேணுவே, வாரி கொள்ளாத ஈரத் துணிகளுடன் படியேறி வந்தாள். அவளோடு சேலையைப் பிடித்துக் கொண்டே வாயில் விரலுடன் 'தங்கச்சி'யும் வந்தது. பஞ்சு மிட்டாய்ப் பையன் பம்பரமும் கயிறுமாக முன்னே முன்னே ஏறி வந்தான்.

"ஆன்டிக்கு வணக்கம் சொல்லம்மா, விஜி! வாயில் விரல் போடக் கூடாதுன்னு சொல்லேனில்லே? ஓடக் கூடாது. குமார் கைப்பிடிப் பக்கம் போய் எட்டிப் பார்க்கையில் நன்றாகப் பிடித்துக்கொள்ள வேணும்!"

# உங்கள் கூந்தலின் உண்மையான அழகை வெளிப்படுத்த கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்






பளபளப்புடனும், அடர்த்தியுடன் இளமைத் துடிப்போடும் விளங்கும் நீண்ட கூந்தலின் ரகசியம் தினந்தோறும் குளிக்குமுன் மயிர்க் கால்களிலும், கேசத்திலும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயில் தேய்த்துக்கொள்வதே என்பதை லக்ஷக்கணக்கான குடும்பத்தினர் அறிந்திருக்கின்றனர். அதன் உன்னதமான நறுமணத்தினால் நீங்கள் பரவசமடைவீர்கள்... கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயில் உங்கள் கேச வளர்ச்சிக்கு உதவுவதைக் கண்டு நீங்களே ஆனந்தமடைவீர்கள்!

அதன் பரவசமூட்டும் நறுமணத்தை உங்கள் குடும்பத்தினர் விரும்புவர்



எகானமி சைஸ் வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்

**கால்கேட்**

பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

இப்பொழுது!

கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்

உங்கள் கூந்தலுக்கு அழகும் நறுமணமும் சேர்க்க ரோஸ், லவண்டர், மல்லிகை ஆகிய 3 வாசனைகளிலும் கடைகளில் கிடைக்கிறது.



CCHO-G-6-74R.

சமதி அவள் குரல் கேட்ட பின்தான் திரும்பிப் பார்த்தாள். சிரிக்க முயன்றும் சிரிப்பு வரவில்லை.

ஆனால் ரேணு அழகாகச் சிரித்தாள். கன்னங்கள் குழிந்தன.

''என்ன சமி, அன்றைக்கு 'க்யூ'வில் பார்த்தேன். நீதான் இங்கே வந்திருக்கிறாயென்று நேற்றுக் காலையில்தான் தெரிந்தது. ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது. இவள் தான் உன் மகளா?''

''ஆமாம், ரேணு. என்னால் நம்பவே முடியவில்லையே ?''

ஒடிந்து விழும் இடையோடு, கொடி போல் நிற்பவள், கொடி மலர் போல் இன்னும் அழகாகச் சிரிக்கிறாள்.

''எதை? எதை நம்ப முடியவில்லை? எனக்கு ஐந்து குழந்தைகள் இருக்கிறார்கள் என்பதையா ?''

''அதையுந்தான் !''

''ஏன், அதில் நம்ப முடியாததென்ன இருக்கிறது சமி? மூன்றுதான் இருக்கலாம் என்று உச்சவரம்புகூட வரவில்லையே? இந்து கொஞ்சம் பெரிய குடும்பம்தான் — உனக்குக் கேலியாகத் தோன்றினாலும், நான் சந்தோஷமாக இருக்கிறேன். இந்தப் பெரிய குடும்பத்துக்கு அம்மாவாக......''

சிரித்து மொழிந்தாலும் சமதியால் இயல்பாக ஏற்றுக்கொள்ள முடியவில்லையே?

''நீ டாக்டருக்குப் படித்தாயா என்ன? எங்கோ நர்ஸிங்ஹோமில் வேலையாக இருந்ததாகக் கேள்விப்பட்டேன்?''

''இல்லையடி, நர்ஸிங் ட்ரெயினிங்தான் எடுத்தேன். இப்போதுகூடப் 'பிராக்டிஸ்' வருகிறது. எனக்கு இஷ்டமில்லை. இங்கே முழு நேரமும் வேண்டியிருக்கிறதே ? இதற்கு மேல் வெளி வேலை எதற்கு? விஜியின் அப்பாவாகப் பார்த்துச் சொன்னாலும் தட்ட முடியாமல் போகிறேன். குமார்....!''

அவள் கவனம் அதற்குள் கைப்பிடிச் சுவருக்கு மேல் எட்டிப் பார்க்கும் பையனிடம் சென்றது.

''எத்தனை பையன்கள், எத்தனை — பெண்கள் ரேணு?''

''குமார் ஒருவனே பையன். ராதுவும் ரா்துவும் இரட்டைகள். நீ பார்த்தாயோ — இரண்டு பேருக்கும் வித்தியாசம் தெரிய வெவ்வேறு மணி மாலைகளைப் போட்டுக் கொண்டிருப்பார்கள். பிறகு ரமா. பக்கத்தில் தான் கிண்டர்கார்டன் ஸ்கூலுக்குப் போகிறாள். குமார், பிறகு இந்த விஜி. குழந்தைகள் எல்லோரும் மிகக் கெட்டிக்காரர்கள். என்னை விட்டு ஒரு நாள் பிரியச் சம்மதிக்க மாட்டார்கள். இந்த அன்பான வீட்டைத் தவிர வேறு என்ன சந்தோஷம் உலகில் இருக்கப் போகிறது சமி? நான் அம்மாவில்லாமலே வளர்ந்தேன். எனக்கு அந்த இளம் பருவத்தில் நல்ல வழிகாட்டியும் அன்பான ஆதரவும் வேண்டியிருந்த காலத்தில் அவற்றை அளிப்பவர்கள் யாருமில்லை. [illegible] என்னைத் தவிர வேறு யாருமே அத்தகைய ஆதரவையும் அன்பையும் இந்தப் [illegible] குழந்தைகளுக்கு அளிக்க முடியாது. இவர்களுடைய அப்பாவை 'நர்ஸிங் ஹோமி'ல் பார்த்ததுமே நான் இந்த முடிவைச் செய்து கொண்டேன். விரும்பியது கிடைத்தபின் உண்டாகும் மகிழ்ச்சிக்கு இணை ஏது சமி? நீவைத் தொட்டுப் பார்த்தபின்பே உணரும் குழந்தை, சொல்லிக் கொடுத்துத் தெரிந்து கொள்வதைக் காட்டிலும் அதிகமாகப் புரிந்து கொண்டவில்லையா?''

சமதிக்கு அவள் குரல்; இனிய இசை போல் கேட்டுக் கொண்டிருந்ததே ஒழிய அவள் எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள். அவர்களுடைய கல்லூரிக்குள் மதிலோரமாக ஒரு புளிய மரம் இருந்தது. ஒரு சமயம் செத்தை, பழுப்புக்களுக்குத் தீயிடும்போது தோட்டக்காரன் அந்த மரம் இருப்பதைக் கவனிக்கவில்லை? அந்த மரம் அப்படியே அந்தப் புகையில் வெம்பி, ஆனால் கருகாமல், பொன்னிறமாக நின்றது. இளஞ் சூரியனின் ஒளியில் அது அவள் அறைக்குள் இருந்து பார்க்கப் பொன் மரமாகவே சில நாட்களுக்குத் திகழ்ந்தது. பிறகு சில நாட்களில் மீண்டும் இலைகள் கொட்டித் துளிர்த்திருக்கக் கூடும். அதை அவள் பார்க்கக் கல்லூரிக்குத் திரும்பி வரவில்லை.

காய்ந்து, பொன்னாக நின்ற மரம் பூத்துக் குலுங்குவதைக் கண்டாற்போன்ற பிரமையுடன் அவள் ரேணு போன பின்னும்கூட அவள் சென்ற திசையையே பார்த்துக் கொண்டிருந்தாள்.


இவன் ராஜா என்கிற பையனைப் பார்த்திருப்பான். ராஜா உடம்பு சரியில்லாமல் வைத்தியசாலையிலிருக்கிறான். இவனுக்கு அவனைப் பற்றிய தகவல்கள் தெரிந்திருக்கும். இவன் பார்ப்பதற்குக் கிட்டத்தட்ட அவன் மாதிரியிருக்கிறான்... ஆள் மாறாட்டம் செய்து நாடகம் நடிக்கிறான்...


அட, கழுத்தில் அவன் மாதிரியே மச்சம் கூட இருக்கிறதே! அதைச் சோதித்துப் பாருங்கள் இன்ஸ்பெக்டர்.


வலிக்கிறதே, வலிக்கிறதே!
மச்சம் மாதிரி இருப்பதற்காகப் இப்போதுதான் பச்சை குத்திக் கொண்டிருக்கிறான்.
இந்தத் திருட்டுப் பயலை லாக்அப்புக்குக் கொண்டு போ.


தம்பி! உன்னைப் பார்த்தால் நல்ல பிள்ளையாகத் தோணுகிறது. பெரிய அயோக்கியன்...
நீயாவது என்னை நம்புகிறாயே?


சாவி கொண்டு வந்து விடுகிறேன்....



சப்புணி முடிவு செய்து கொண்டான்:

'இனி இந்தத் தஞ்சையில் நமக்கு வேலையில்லை. நேரே மெட்ராஸுக்கு டிக்கெட் வாங்கி ரயில் ஏற வேண்டியது. நமக்குத் தெரிந்த பிச்சுமணி ஐயர் அங்கே ஏதோ ஒரு பெரிய டயரோ, காரோ தயாரிக்கும் தொழிற்சாலையில் பெரிய வேலையில் இருப்பதாக அவர் பல முறை சொன்னது ஞாபகத்துக்கு வந்தது; அவரை நாடினால் ஒரு வேலை சாப்பாட்டுக்கு வழி தேடித் தர மாட்டாரா?'

தன் சொத்தான இரண்டு நாலு முழ வேஷ்டிகளையும், இரண்டு சொக்காய்களையும் இஸ்திரி போட்டு, மடித்துப் பெட்டிக்குள், அதாவது சின்னத் தகர டப்பாவுக்குள் வைத்துக் கொண்டான். கையில் வெற்றிலை பாக்குப் பெட்டி. இதுதான் அவன் உயிர்; ஏது இருந்தாலும் இல்லா விட்டாலும் வெற்றிலை, பாக்கு அவசியம் வேண்டும் அவனுக்கு. அப்பொழுதுதான் வேலை ஓடும். ஓர் அண்டா 'தண்ணி' (காப்பி டிகாக்ஷனைச் சொல்கிறேன்!) இருந்தாலும் அதை அலட்சியமாகத் தூக்கி வைப்பான் — வாயில் நிறைய 'ஸ்டாக்' இருந்தால்.

தன் சொத்தான டிரங்கை வலது கையில் எடுத்துக் கொண்டு நேரே ஸ்டேஷனுக்கு நடந்தான். டிக்கெட் வாங்கவும், செலவுக்கும் போதிய பணம் இருந்தது. டிக்கெட்டை வாங்கி, பெட்டியில் ஏறின போது மனசை ஏதோ ஒன்று கலக்கியது. இவ்வளவு வருஷங்களாகத் தஞ்சையில் பிறந்து வளர்ந்து ஆளாகி, ஒரு சிறிய தண்ணீர்ப் பந்தல் நடத்தும் அளவுக்கு உயர்ந்த போது தானா இந்த அரிசிக் கஷ்டம் அவனுக்கு வர வேண்டும்? எவ்வளவோ சிரமத்திலும் அவன் அந்தத் தண்ணீர்ப் பந்தலைப் பல வருடங்களாக நடத்தி வந்தான். இருந்தாலும் இந்த அரிசிக் கஷ்டம் அவனை அமுக்கிவிட்டது. எத்தனை நாளைக்குக் கடன் வாங்கி

# சப்புணி

டி. ஆர். ராஜாராம்

ஹோட்டலை நடத்துவது? கடன் வரவர விஷம் போல் ஏறவே, கடையை இழுத்து மூடிவிட்டான். பெரிய பெரிய ஹோட்டல்களெல்லாம் மூடும் போது இவன் தண்ணீர்ப் பந்தல் எம்மாத்திரம்? பிழைக்க வேறு வழி இந்தத் தஞ்சையில் இல்லே. ஏனெனில், எல்லோரும் வாடிக்கைக்காரர்கள். பல வருடங்களாகப் பார்த்த முகம். அவர்கள் எதிரில் கைநீட்டிப் பிழைக்க அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. எனவே, தனக்கு மிகவும் தெரிந்த ஒருசில நண்பர்களின் மூலம் சென்னையில் காலத்தை ஓட்டி விடலாம் என்று தஞ்சைக்கு ஒரு கும்பிடு போட்டு விட்டு ரயிலேறி விட்டான். தஞ்சையை விட்டு வண்டி நகரும்போது தன் சொந்தத் தாயைப் பிரிவதுபோல இருந்தது. துக்கத்தை அடக்கிக் கொண்டான்.

'இதுதான் எழும்பூர் ஸ்டேஷனு? எவ்வளவு பெரிசா இருக்கு!'

ஸ்டேஷனைப் பார்த்து வியந்த கப்புணி அதை விட்டு வெளியே வந்ததும் இன்னும் வியந்தான். இவ்வளவு பெரிய சென்னையில் நம்ம பிச்சாமணி ஐயரை எப்படித் தேடறது? அவன் யோசனை பலமாகி விட்டது. முதலில் காப்பி சாப்பிடுவோம் என்று எண்ணியவனாக எதிரேயிருந்த ஹோட்டலுக்குள் நுழைந்தான். ஒரு கப் காப்பி சாப்பிட்டான். வாந்தி வரும் போல இருந்தது. 'சே.... என்ன காப்பி போடறுங்கள்... சுத்தத் தண்ணி காப்பி. நம்ம ஊர்லே காப்பி கும்மா இக்கா, டிகிரி கணக்கிலே, மணக்குமே? இங்கே சாக்கடை நாத்தம்தான் அடிக்கிறது.'

காப்பி சாப்பிட்ட தெம்பில் எங்கெங்கோ நடந்தான். யார் யாரையோ விசாரித்தான். அவன் சொன்ன விலாசத்தைக் கேட்டு யார்தான் சரியான வழி சொல்ல முடியும்? ஒவ்வொருத்தர் அவன் சொன்னதைக் கேட்டுச் சிரித்தார்கள். இன்னும் சிலர் எங்கோ வழி காட்டி விட்டார்கள். இப்படியே நடந்து நடந்து மவுண்ட்ரோடுக்கு வந்து விட்டான். எல். ஐ. சி. கட்டடத்தைப் பார்த்தும் பிரமித்து நின்று விட்டான். எல்.ஐ.சி.யினுள் நுழைந்து உள்ளே பிச்சாமணி அய்யரைப் பற்றி விசாரித்தான். அவர்கள் தெரியாது என்று சொல்லி விரட்டி விட்டார்கள். ஒரு வேளை மேலே ஏறிப் போய்ப் பார்க்கலாமே என்கிற நைப்பாசை இருந்தது. ஆனால் அங்கிருந்தவர்கள் விட்டால்தானே!

வயிறு குடைந்தது. எங்கோ ஓர் ஓட்டலில் சாப்பிட்டான். சாப்பாடா அது? சோற்றில் கல் மண்ணும் சின்னச் சின்னப் புழுக்களும் தாராளமாக வந்தன! வேகாத காய்கறி. ஏதோ கடனுக்காகச் சாப்பிட்டு வெளியே வந்தான். நடந்து கொண்டே ஒவ்வொர் ஆபீஸிலும் ஏறி இறங்கி வரும்போது பிரபல வாரப் பத்திரிகையின் போர்டு தெரிந்தது. 'ஆகா பங்கஜாட்சி நம்மைக் கைவிடவில்லை. நம்ம ஊர்ப் பஞ்சு இங்கேதானே வேலை செய்யறதா அடிக்கடி சொல்லியிருக்கான்! உள்ளே போய் விசாரிப்போம்.'

'ரிஸப்ஷன்' ரூமில் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவரிடம் பஞ்சுவைப் பற்றிய விவரம் சொல்லி அவர் இருக்கிறாரா என்று கேட்டான். ''அந்த நாற்காலியில் உட்காருங்கள். சொல்லி அனுப்புகிறோம். வருவார்'' என்றார்.

சிறிது நேரத்தில் பஞ்சு வந்தார். கப்புணியைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். கப்புணி தன் கதையைச் சொன்னவுடன் 'சரி வா, வீட்டுக்குப் போய் மற்றதைப் பேசிக் கொள்ளலாம்' என்றார். அவருடன் வீட்டுக்குப் போய்த் தான் சென்னையில் அலைந்த பட்டதைச் சொன்னான். அவர் காரியாலயத்திலேயே வேலை கிடைக்குமா என்று கேட்டான். தற்சமயம் வேலை காலி இல்லை என்றார் அவர். பிச்சாமணி ஐயரைப் பற்றிக் கேட்டான். இரண்டொரு நாளில் பிச்சமணி ஐயரைப் பற்றிய விவரம் சொன்னார். அவர் திருவொற்றியூரில் இருக்கும் பெரிய தொழிற்சாலையில் உயர்தர அதிகாரியாக இருப்பதாகவும், போய்ப் பார்த்தால் ஏதேனும் சகாயம் செய்யலாம் என்றும் சொன்னார். உடனே கப்புணி தன் வெற்றிலைச் செல்லத்தை எடுத்துக் கொண்டு திருவொற்றியூருக்குப் போனான். அங்கு இருக்கும் தொழிற்சாலையைப் பார்த்துப் பிரமித்தான். இவ்வளவு ஆட்கள் வேலை செய்யும் போது நமக்கா வேலை கிடைக்காது?

'ரிஸப்ஷன் ரூமில்' ஓர் ஆங்கிலோ இந்திய மாது ஸ்டைலாக உட்கார்ந்திருந்தாள். 'இவ்வளவு ஆண்கள் வேலை செய்கிற இடத்திலே இவ எங்கே இங்கே வந்தா?' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான். வெளியில் சொல்லவில்லை. 'எல்லாம் பட்டணத்து பாஷன் போலிருக்கு.'

அவள் ஒரு சீட்டைக் கொடுத்து வந்தவர் பெயர் என்ன, உத்தியோகம் என்ன, பார்க்க வேண்டிய அவசியம் என்ன என்பதைக் குறித்துக் கொடுக்கும்படி சொன்னாள். 'இது ஏதடா சங்கடம்? நமக்கு இங்கிலீஷ் தெரியாதே! சரி, நம்ம ஐயருக்குத் தமிழா தெரியாது? தமிழிலேயே எழுதுவோம். பெயர்: கப்புணி. உத்தியோகம்: உத்தியோகம் என்ன எழுதறது? ஹோட்டல் சர்வர் என்று எழுதலாமா? சே....அது கௌரவக் குறைச்சல்.... பின்னே.... சரி, இப்படி எழுதுவோம்.. 'தஞ்சை தண்ணீர்ப் பந்தல்' ராயர் கடை' (ராயர் கடைன்னு ரொம்பப் பிரசித்தம்) பார்க்க வேண்டிய அவசியம்: இதற்கு என்னடா எழுதறது? ''கும்மா'ன்னு எழுதலாமா? 'கும்மா' பார்க்கிறதுக்குத்தான் நான் ஆபீஸிலே உட்கார்ந்திருக்கிறேனு என்பார். வேணும்.... இப்படி எழுதலாம். உத்தியோகம் தேடி வந்திருக்கேன்!' ஒரு வழியாக எழுதிக் கொடுத்தான். அந்தச் சீட்டைப் பார்த்துச் சிரித்தான் அந்த ஆங்கிலோ இந்தியப் பெண். ஓர் ஆளிடம் அதைக் கொடுத்தனுப்பினாள். சிறிது நேரத்தில் அந்த ஆள் கப்புணியைக் கூப்பிட்டான். பெரிய ஆபீஸ் தனிக் கட்டடத்தில் இருந்தது. அதன் முதல் மாடியில் உள்ளே நுழைந்தான். இருபது முப்பது காரியாலய சிப்பந்திகள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். எதிரே ஒரு 'ஏர் கண்டிஷண்டு ரூம்'. அதன் வாசலில் 'டி. பிச்சமணி அய்யர்' என்று பிளாஸ்டிக் எழுத்துக்களில் பொறிக்கப்பட்டிருந்தன. பியூன் வந்து 'உள்ளே போகலாம்.... ஐயா தனியாகத்தான் இருக்கார்' என்றான். அதைக்

கதவை எப்படித் திறப்பதென்றே தெரிய வில்லே. பியூன் வந்து சகாயம் செய்தான். 'நம்ம ஐயரைப் பார்ப்பதற்கு இவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கே!'

உள்ளே நுழைந்தான். 'ஜில்'லென்று இருந்தது. உடம்பெல்லாம் ஒரு கணம் வெட வெட வென்று நடுங்கியது. எதிரே குஷன் போட்ட நாற்காலியில் 'ஐயர்' 'ஜம்' மென்று உட்கார்ந்திருந்தார்.

''கப்புணி! நீயாடா?''

''அண்ணு.....!''

காரியாலயம் என்றும் பாராமல் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தான் கப்புணி.

''சேசே.... அடு.... என்ன இது? எழுந்திரு.....''

''அண்ணு! நீங்கள்தான் காப்பாத்தணும்.''

''இப்போ என்ன நடந்ததுன்னு அறியே?''

''ஓட்டலே மூடிட்டேண்ணு! அரிசிப் பஞ்சத்திலே தாக்குப் பிடிக்க முடியல்லே! கடன் ஏகப்பட்டதா ஏறிப் போச்சு.... அதனுலே கடையை மூடிட்டு, உங்ககிட்டே வந்துட்டேன். நீங்கதான் பெரிய மனசு பண்ணி எனக்கு உத்தியோகம் பார்த்துக் தரணும்...''

''ம்.... நீ எது வரை படிச்சிருக்கே?''

''என்ன கேள்வியண்ணு? உங்களுக்குத் தெரியாதா? அந்தக் காலத்திலே ஆறுவது வரைக்கும் படிச்சவன். தமிழ் வாசிப்பேன்.''

''இங்கிலீஷ்.....''

''நம்ம உத்தியோகத்துக்கு இங்கிலீஷ் வேணுமாண்ணு?''

''இதோ பார் கப்புணி.... நான் சொல்றேன்னு கோவிக்கக்காதே... உனக்கு என் செல்வாக்கை உபயோகப்படுத்தி இன்னிக்கே ஒரு வேலையை இந்தத் தொழிற்சாலையில் வாங்கிக் கொடுத்திட முடியும். ஆனு.... உனக்கு ஒரு எதிர்காலமும் இல்லையே.... எவ்வளவு நாளுக்குத்தான் நீ படைரைத் துடைச்சின்டிருப்பே..... மிஞ்சி மிஞ்சிப் போனு ஒரு டர்னரா, பிட்டராக வரலாம்..... உன் படிப்பு.... உன் பழைய கால வாழ்க்கை... இதெல்லாம் பார்த்தா நீ இங்கே நீடித்திருப்பாயா என்பது சந்தேகம். நானும் தஞ்சாவூர்க்காரன்தான்.... என் விஷயம் வேறே..... சின்ன வயசிலேயே அப்பா என்னே மெட்ராஸிலே விட்டுட்டார் படிக்கிறதுக்காக. படிச்சேன். படிச்சேன், வெளி நாட்டுக்கெல்லாம் போய்ப் படிச்சேன். இப்போ பெரிய உத்தியோகம் பார்க்கிறேன். கைநிறைய சம்பளம். கார் என்ன... பங்களா என்ன.... எல்லாம் இருக்கு. ஆனும் ஒன்னுதான் இல்லே.... அதுதான் நிம்மதி. நிம்மதி போய் எவ்வளவோ வருஷமாச்சு. எப்போ பார் என் மூளே கொதிச்சுண்டு இருக்கு....: வீட்டுக் கவலே.... காரியாலயக் கவலே..... தொழிற்சாலையை எப்படி விரிவு படுத்தலாம்..... எந்தெந்த வகையில் புதுப் புது மாடலில் ஸ்கூட்டரையும், காரையும் உற்பத்தி பண்ணினுல் ஜனங்கள் வாங்கு வாங்க. அதற்கு வேண்டிய சாமான்கள் எங்கெங்கே கிடைக்கின்றன? வெளி நாட்டிலே யாரைப் போய்ப் பார்த்தால் இந்தச் சாமானெல்லாம் கிடைக்கும்..... அவரை எப்படிப் போய்ப் பார்க்கிறது.... இதற்கு




நடுவிலே அரசாங்கம் பல வரிகளையும், சட்டங்களையும் தடையா கொண்டு வரும். அதை யெல்லாம் எப்படிச் சமாளிக்கிறது... இப்படி அநேகக் கவலைகள்.... மனுஷன் மேலே படிக்கப் படிக்க அவன் கவலைகள் ஜாஸ்தி. இந்த 'ஏர் கண்டிஷன்டு ரூம்லே' மனுஷனைப் போட்டு அடைக்கிறதுபோல, அவனுடைய மனசை, மூளையைப் போட்டு அடைக்க முடியல்லியே..... இதோ பார்.... இந்த அறையில் எத்தனை 'மேப்' (படங்கள்) இது அமெரிக்காவில் உள்ள பெரிய பெரிய நகரங்களின் விமான மார்க்கத்தைக் காட்டும் படம். இது இங்கிலாந்து.... இது ரஷ்யா... இது இந்தியா..... இவ்வளவு ஊர்களுக்கும் நான் அடிக்கடி பறந்து போய் வர்றேன். ஒரு வருஷத்திலே பத்து மாசம் நான் வெளி நாட்டிலேயே இருக்கேன். நல்ல வேளை! நீ வந்த சமயம் நான் ஊரிலே இருக்கேன். இப்படி என் கவலைகளுக்கு நடுவிலே எனக்குச் சற்று மன அமைதியைக் கொடுக்கிறது இதுதான்..... இதோ வந்து பார் கப்புணி....

மேஜை மேலிருந்த தடித்த கண்ணுடி விரிப்புக்குக் கீழே தஞ்சாவூரின் பல தெருக்களை விளக்கும் வரை படமும், அதன் பக்கத்தில் பிரகதீச்வரரின் கோவில் படமும் இருந்தன!

''நம்ம ஊர் கோவில் அண்ணு இது....: இது எதற்கு இங்கே.....''

''அதுலேதான்டா விஷயம் இருக்கு....: அதைப் பார்த்தால் எனக்கொரு நிம்மதி. சிறு வயசிலே படிச்ச ஸ்கூல், நான் விளையாடுவதற்காகச் சுற்றிச் சுற்றி வந்த தெருக்கள், கோவில்.... இவைகளைப் பார்த்தா, நான் பழைய உலகத்துக்குப் போய் விடுவேன். அந்தச் சில மணி நேரத்துக்காவது என் கவலைகளே மறந்து நம்ம ஊரைப் பத்தி நினைத்துக் கொள்வேன். அப்போ உன் தண்ணீர்ப் பந்தல் ஞாபகத்துக்கு வரும். உன் ஓட்டல்லே இட்லி.... சே இட்லியா அது.... எவ்வளவு வெண்மையா, பூப்போல இருக்கும். அதற்கு இரண்டு கரண்டி நெய் விட்டுண்டு.... மிளகாய்ப் பொடி சேர்த்துச் சாப்பிட்டா.... ஆஹா.... அந்த ருசியே தனி தான்...... நீ கொடுக்கிற அந்த டிகிரி காப்பி..... என்ன மணம்... என்ன ருசி... அன்றைக்கெல்லாம் வேறே ஒன்னுமே சாப்பிட வேணுமே. ஒரு வெண் பொங்கலாகட்டும்..... தயிர் வடையாகட்டும்.... எவ்வளவு ருசியாப் பண்ணுவே.... அதை யெல்லாம் சாப்பிடறதுக்குக் கொடுத்து வைக்கணுமே...

லண்டன்லேயோ அமெரிக்காவிலேயோ இருக்கிறப்போ உன்னை ரொம்ப நாம் நினைக்கப் போறோம் சுப்புணி..... சுப்புணி இப்போ பக்கத்திலே இருந்தா.... இந்த வெள்ளைக்காரங்க எவ்வளவு இட்லியை குப்பைல பண்ணுவாங்க..... காப்பியைப் 'பீர்' அடிப்பது போல் குடம் குடமா இல்லே குடிப்பாங்க.... அந்த நினைப்பு..... நம்ம ஊர் பற்றிய இனிய நினைப்பு..... அதிலே கிடைக்கிற என் சந்தோஷம்.... சுப்புணி.... அதை வாயாலே சொல்லவும் தெரியாது. அதெல்லாம் விட்டுட்டு இப்படி வெளி நாட்டிலே வந்து உட்கார்ந்திருக்கோமே.... என்ன உத்தியோகம் வேண்டிக் கெடக்கு. இதெல்லாம் உதறிட்டுப் பிரகதீஸ்வரர் கோவில்லே வந்து நிம்மதியா உட்கார்ந்திடலாமா என்று எவ்வளவோ தடவை நினைத்ததுண்டு. ம்....உன் பாடு நிம்மதி..... உன் உலகமெல்லாம் அந்த ஓட்டலோட சரி.... மிஞ்சி மிஞ்சிப் போனா அந்தத் தஞ்சாவூர் நாலு தெருவோட சரி. உனக்கு நிம்மதி..... வாழ்க்கை அந்த எல்லைக்குள் அடங்கி விடுகிறது. எனக்கோ.... நாளைக்கு வாஷிங்டனுக்குப் பறக்கணும். அங்கு ஒரு மாதம் வேலை. ஆட்டையும் மாட்டையும் கட்டிண்டு பசியைப் போக்கணும். பிறகு லண்டன் போய்ப் பெரிய அதிகாரிகளைப் பார்த்துப் பேசணும். இப்படி ஒரு கவலைன்னு இல்லே..... பல கவலை.... ஊர்லே இருக்கிற கமலீஸ்வரர் கோவிலுக்குப் போய்வர நேரமில்லே. ஆசார அனுஷ்டானமெல்லாம் எப்பவோ மறந்து போச்சு. உங்களைப் போல மனுஷாளைப் பார்த்தா எங்களுக்குப் பக்தி, பயம் ஏற்படறது..... எல்லாரும் வேலைக்குன்னு மெட்ராஸுக்கு வந்துட்டா, அப்புறம் நம்ம ஊர் பெயர், புகழ், கலை, ஆசாரமெல்லாம் என்னவாறது? நான் சொல்றது புரியறதா?''

''எல்லாம் சரிதான் அண்ணா! ஆனா நான் ஒருத்தன் மெட்ராஸுக்கு வந்துடறதாலே தஞ்சாவூர் கோவில் குளம்.... அது இது.''

''நோ நோ! அதுக்குச் சொல்லலே! உன்னைப் போல ஒவ்வொருவரும் ஊரை விட்டு இங்கு வந்துட்டா நம்ம புராதன ஆசாரம்..... கலை... இதெல்லாம் போயிடும். மெட்ராஸுக்கு வந்த உடனே ஆளே மாறிடுறான்.... தன் பூர்வோத்தரம் கலையே மறந்துடுறான். ஒண்ணு சொல்றேன் கேளு..... உன்னைப் போல இட்லியும், 'டிக்'கா டிகிரி காப்பியும் எல்லோருக்கும் போட வருமா? அது ஒரு கலை.... எல்லோருக்கும் அப்பேர்ப்பட்ட கலை வந்துட்டா அதுக்கு மதிப்பு கிடையாது.... உன் ஹோட்டல் சின்னதுதான். ஆனா எவ்வளவு பேர் சாப்பிட்டிருக்கா? ஏன்... ஊர்லே மத்த ஹோட்டலா இல்லே.....? உன்கிட்டே அலாதியான கலை. செய்யும் பதார்த்தத்தில் ஒரு ருசியை ஏற்படுத்தும் வித்தை இருக்கு.... ரொம்பப் பேசவானேன்.... உனக்கு மொத்தம் எவ்வளவு கடன் இருக்கு?''

''கிட்டத்தட்ட ஆயிரம் ரூபா....''

''சரி.... கடையைத் திறக்க இன்னும் எவ்வளவு தேவைப்படும்.....?''

''இன்னும் ஆயிரம் ரூபாய் இருந்தால் சமாளிக்கலாம் அண்ணா...''

''இன்னிக்கு ராத்திரி வீட்டுக்கு வா...? மொத்தமா இரண்டாயிரம் ரூபாய் கொடுத்திடறேன். ஜாம் ஜாம்னு போய் முதல்லே கடையைத் திற. அரிசிப் பஞ்சம் எப்பவுமா இருக்கப் போறது? அப்படி இருந்தாலும் அடுத்த மாதம் நான் தஞ்சைக்கு வர்றப்போ என்கிட்டே சொல்லு. நான் அதுக்கான ஏற்பாடு செய்யறேன். அடுத்த மாசம் அமெரிக்காவிலேயிருந்து நாலைந்து அமெரிக்கர்கள் நம்ம பாக்டரியைப் பார்க்க வர்றாங்க; அப்படியே மதுரை, தஞ்சாவூர், திருச்சிக்கு கோவில், அழகான சிற்பக் கலை இவை பார்க்க வர்றாங்க..... நான்தான் அவங்களை அழைச்சிண்டு வரப் போறேன். அப்போ நிச்சயமா உன் ஹோட்டலுக்கு வந்து வயிறு நிறைய இட்லியும் காப்பியும் சாப்பிடப் போறேன்; அவர்களும் சாப்பிட்டு சர்டிபிகேட் கொடுப்பார்கள். யார் கண்டா.... ஒரு நாளைக்கு உன் இட்லி பார்சல் பண்ணி அமெரிக்காவுக்குப் பிளேன்லே போனாலும் போகும்...! எல்லாம் உன் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது. அதெல்லாம் விட்டுட்டு இங்கே நாத்தம் பிடிச்ச மெட்ராஸிலே, மீன் வர்ற கூவத் தண்ணியைக் குடிச்சிட்டு எத்தனை நாளைக்கு இங்கே டபரைத் துடைச்சிண்டு இருப்பே...? அதெல்லாம் உனக்குச் சரிப்பட்டும் வராது. இவ்வளவு வருஷமா காவேரித் தண்ணி குடிச்சவனுக்கு இதெல்லாம் பிடிக்கவே பிடிக்காது ...... என்ன சுப்புணி..... பேசாம நிக்கிறே...?''

''என்னண்ணா பேசறது? நீங்க பெரிய மனுஷா.... நிறையப் படிச்சவா.... நீங்க சொல்றதிலேயும் உண்மை இருக்கு.... நான் ஒண்ணுந் தெரியாத ஒரு நாதரி.... நீங்கதான் எனக்குத் தெய்வம்....'' கண்களில் கரகரவென்று நீர் வழிந்தோட அவன் மறுபடியும் அவருக்கு நமஸ்காரம் செய்யப் போனான்.

''என்ன இதெல்லாம் அசடு... அழாதே..? நாங்களெல்லாம் எதற்காக இருக்கோம்? எங்களாலே பழைய வாழ்க்கை வாழ முடியலேன்னு மனம் வேதனைப்படறோம்..... நீங்களாவது சந்தோஷ வாழ்க்கை நடத்துங்க. வருஷத்துக்கு ஒரு முறையாவது நம்மூருக்கு வரமாட்டோமா? அப்போ உங்க அன்பான முகத்தைப் பார்த்து, உங்கள் 'அண்ணா' என்கிற வாஞ்சையான சொல்லாலே உளம் குளிர்ந்து, சந்தோஷப்படுவோம். அதுவே எங்களுக்குப் போதுமானது. அந்த நினைவே கல்கத்தா போனாலும், பாரிஸ் போனாலும், எங்கள் மனத்துக்கு ஒரு நிறைவு தரும்..... சரி, நாழியாறது....நீ போய் என் பேர் சொல்லி இங்கேயிருக்கிற கான்டீனில் சாப்பிட்டு, வீட்டுக்குப் போ....? நான் சாயங்காலம் வந்து உனக்கு வேண்டியதைச் செய்யறேன். கவலைப்படாதே .....? சுப்புணி....'' என்றார்.

துண்டைத் தூக்கித் தோளில் போட்டுக்கொண்டே செல்லும் சுப்புணியைப் பார்த்துப் பிச்சுமணியய்யரின் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் வழிந்தோடியது. அது ஆனந்தக் கண்ணீரா, துக்கக் கண்ணீரா என்று அவருக்கே தெரியாது.




# ஆல்போ-ஸாங்

## எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இந்த போஷ் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.






ஜே. அன் ஜே. டிஷேன்
ஹைதராபாத் (டெக்கான்)

# ஆதிவாசிகளின் அதிசயசக்தி

பாலை வனாந்தரங்களிலும், மலைகளிலும், பாலைகளிலும் வசித்து வரும் ஆதிவாசிகளிடம் அற்புதத் திறன்கள் பல உள்ளன. துப்பறியும் இலாகாவின் நுண் கருவிகளைவிட நுண்ணிய மோப்ப சக்தியும், திருஷ்டி சக்தியும், அநுமான சக்தியும் அவர்களுக்கு இருப்பதால் தான் பல நாடுகளில் இவர்களைக் கொண்டே மர்ம பயங்கரக் குற்றங்களைத் துப்பு துலக்குகிறார்கள். சில ருசிகரமான உதாரணங்களைப் பார்ப்போம் :

ஆஸ்திரேலியாவில் குவின்ஸ்லாந்து போலீஸாரால் ஒரு குற்றம் பற்றித் தடயம் கண்டுபிடிக்க முடியவில்லை. குற்றம் நடந்த இடத்திலிருந்த அடிச்சுவட்டை ஓர் ஆதிவாசி கண்டு கொண்டான். மற்றவருக்குப் புலனாகாத மங்கிய அடிச்சுவட்டைப் பின்பற்றினான்; துரதிருஷ்டவசமாக மழை பெய்து கால் அடையாளங்களெல்லாம் அழிந்து விட்டன. ஆனால் ஆதிவாசியின் மனத்திலிருந்து அடையாளம் மறையவில்லை.

நாட்கள் ஓடின. ஜனசஞ்சாரம் மிகுந்த சாலைகளில் ஆயிரமாயிரம் அடிச்சுவடுகளுக்கிடையே ஆதிவாசி அந்தப் பழைய சந்தேகாஸ்பதச் சுவட்டைத் தப்பாமல் அடையாளம் கண்டுகொண்டான். போலீஸாருடன் அதனைப் பின்தொடர்ந்து சென்று ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தான். குற்றவாளியும் பிடிபட்டான்!

சௌதி அரேபியாவில் ஆதிவாசிகள் துப்புத் துலக்குவதால்தான் குற்றங்கள் மிகக் குறைவாக நிகழுகின்றன.

அந்நாட்டில் மண்ணெண்ணெய் கம்பெனி மெகானிக் ஒருவர் ஒரு முக்கியமான சாவியைத் தொலைத்து விட்டார். போலீஸார் துப்புக் கண்டுபிடிப்பதற்காக 'மூர்ரா' இன ஆதிவாசி ஒருவனை அழைத்து வந்தனர்; அவனது கண்களுக்கு மட்டும் ஏதோ அடிச்சுவடு புலப்படவே அதனைப் பின்பற்றிச் சென்று போலீஸாரைப் பாலைவனத்தில் அழைத்துச்சென்றான். நாலு பேர்கள் காப்பி அருந்திக் கொண்டிருந்த ஒரு கூடாரத்தை அடைந்தான். அந்த நால்வரில் ஒருவனைச் சுட்டிக்காட்டினான். விந்தை! அவனிடமிருந்து அந்தக் களவுபோன சாவி அங்கேயே அப்போதே கைப்பற்றப்பட்டது.

மெக்கா அருகே அலி என்று ஒட்டக மந்தை மேய்க்கும் ஓர் இளைஞன். ஒரு நாள் மாலை ஒட்டகங்கள் யாவும் சொந்தக்காரர் வீட்டுக்குத் திரும்பின. அலி வரக் காணோம்; போலீஸைக் கூப்பிட்டார்கள். போலீஸார் ரஸ்பேக் என்ற மூர்ராவைக் கூப்பிட்டனர்.

ரஸ்பேக்குடன் போலீஸார் ஜீப்பில் பாலைவனத்துக்குப் போனார்கள். மேய்ச்சல் பூமி வந்தவுடன் ரஸ்பேக் இறங்கினான். ஒட்டகக் குளம்பு பதிந்த இடங்களைக் கூர்ந்து கவனித்தான். "மூன்று பேடௌன் இனத்தார் அங்கே பதுங்கி வந்திருக்கிறார்கள். அவர்களில் இருவரிடம் துப்பாக்கியிருந்திருக்கிறது. ஒட்டகங்களைத் திருடும் உத்தேசத்துடன் அலியைச் சுட்டிருக்கிறார்கள். ஆனால் துப்பாக்கி ஓசையில் மிரண்டு ஒட்டகங்கள் ஓடி விட்டன; மூன்று பேரில் இருவர் உயரமாகவும் பருமனாகவும் இருந்திருக்க வேண்டும். மற்றவன் ஒல்லியாகவும், இடது கண் மந்தப் பார்வை உடையவனாகவும் இருந்திருப்பான்."

இவ்வளவும் ஆதிவாசியின் 'ஞான திருஷ்டி'. அவன் காட்டிய திசையிலேயே போலீஸ் ஜீப் சென்றது. நீர் நிலையம் ஒன்றை அடைந்தனர். அங்கே மூன்று பேர் ரஸ்பேக்கின் அநுமானப்படியே இருந்தனர். அலியின் தலையை உடலிலிருந்து துண்டித்துப் பாலைவனத்தில் புதைத்திருந்தனர் மாபாவிகள்.

எகிப்தில் புகழ்பெற்ற துப்பறியும் நிபுணராக இருந்த ஸர் ஸிட்னி ஸ்மித் ஆதிவாசிகளின் திறமையை வியந்து கூறுகிறார். இவர் ஈடுபட்டிருந்த ஒரு வழக்கில் பேடௌன் ஆதிவாசி ஒருவனின் உதவியை நாடினார்கள்; அவன் மனிதக் காலடிகளும், பூட்ஸ் அடையாளங்களும், டயர் சுவடுகளும் பின்னிக் கிடந்த பகுதிகளிலும்கூட ஒரு குறிப்பிட்ட பாத அடையாளத்தை எவ்வாறோ பின்பற்றிச் சென்றானாம். முடிவாக அவர்கள் அடைந்த இடத்தில் ஆறு பேர் தங்கியிருந்தனர். ஆதிவாசி ஒருவனைத் தயக்கமின்றிச் சுட்டிக் காட்டினான். அவனது திறமையைப் பரிசோதிப்பதற்கென்று மற்றும் பலரைச் சேர்த்து நடக்க வைத்தபோதும், சந்தேகாஸ்பத நபரைச் சேர்க்காமலே பலரை நடக்க வைத்த போதும் அவன் தவறாமல் பழைய ஆளையே கண்டுபிடித்தான்.

நாகரிக வளர்ச்சி பெற்ற நாம் வெளி உபகரணங்களைப் பெருக்கி அவற்றின் உதவியால் ஏதேதோ சாதிக்கிறோம். ஆதிவாசிகளோ இறைவன் அளித்த உள் சக்தியை மங்காமல் காத்து நம்மை மிஞ்சி விடுகிறார்கள். (ஆதாரம்: 'ஸண்டே ஸ்டாண்டர்டு')

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.









Macleans

REGISTERED NO. M. 4392
Registered as a Newspaper in Ceylon

பனாமா ஒரு நல்ல சிகரெட்டு...

# இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை




தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப்
புகையிலைகளின் கலவைப்
பதனாக தன்மையான
புகைநயம் — அதுவே
உங்கள் பனாமா!

செழுமையான
வர்ஜீனியாப் புகையிலை
சீர்நிரவிய கலவை
புதுமை மயமானது




பிரத்தியேகத் தயாரிப்பாளர்கள் :
கோல்டன் டொபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்.
பம்பாய்-56

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்கள்

36-C Greens' Advtg.